*Kumaran̲*

*Āram 5, muttu 24*

*January 26, 1928*

Record no. 313

Registered No. M. 1823
Tel: KUMARAN, KARAIKUDI.

உ
சிவமயம்.

தனிப்பிரதி
விலை அணு ஒன்றரை.

# குமரன்

"என்கடன் பணிசெய்து கிடப்பதே."

(வாரப் பதிப்பு.)



வியாழன் தோறும் வெளியிடப் பெறுவது.

"கதரே உயிர்." "கருணையே தெய்வம்."

ஆரம் ரு. முத்து உ௪. | காரைக்குடி. பிரபவ-ஹு தை-மீ கௗ-உ (26—1—28) | க௬ பக்கங்கள்.

# இலங்கை வீரம்.

திருவாளர் ரா. பி. சேதுப்பிள்ளை. பி. ஏ., பி. எல்.



கலைமகளும் திருமகளும் களித்து நடம் புரிந்த இலங்கைமா நகரில் வீர மாதும் விளங்கித் திகழ்ந்தாள். வரத்திலும், வலிமையிலும் தலைசிறந்து இலங்கிய இலங்கேசன் வீற்றிருந்த வளநகரில் வீரமாது வீறு பெற்று விளங்கினுள். அந்நகரைக் காவல் செய்த அருங்கடலினும் அரக்கரது சேனைப் பெருங்கடல் அகன்று பரந்திருந்தது. கருங்கடலையும் எளிதாய்க் கடந்த அநுமன், சேனைப் பெருங்கடலைக் கடத்த லரிதென்று கருதினுன்.

"கருங்கடல் கடப்பதரிதன்று நகர்காவல்
பெருங்கடல் கடப்பதரிது"

என்று கவியரசர் அநுமன் வாயிலாக அரக்கரது சேனை அளவிறந்ததென்று அறிவிக்கின்றார். கல்லெனத் திரண்ட கருத்தமேனியும், கனல் உமிழும் கண்களும், கணக்கிலா வீரமும் வாய்ந்த கருஞ்சினத்தரக்கரை,

"காய்த்தாற் பெரியர் வீரம் கணக்கிலர்
உலகம் கல்லும்
ஆயத்தார் வரத்தின் தன்மை அளவற்றார்"

என்று அநுமன் வியந்து புகழ்ந்தான். இன்னும் இலங்கைமா நகரில் வாழ்ந்த ஆடவரனைவரும் வீரச் செல்வராய் விளங்கினுர்கள். கால்களில் வீரக்கழல் அணிந்து கரங்களில் வேலைத்தாங்கி கண்களில் நெருப்புப் பொறி பறக்க நின்ற அரக்கரது நீர்மையை,

"கழலுலாம் காலும் கால் அயிலுலாம்
கையும் காந்தும்
அழலுலாம் கண்ணும் இல்லா
ஆடவ ரில்லை"

என்று கம்பர் அழகுற அமைத்துப் போந்தார். போரோங்கிப் புகழ் விரிந்திலங்கிய இலங்கைமா நகரில் அரக்கர் சேனை ஆடிப்பாடி அகங் களித்தது. பசியும் பிணியும் இன்றி வசியும் வளமும் சுரந்த வீரநகரில் மதுபானமும், மதுர கீதமும், மங்கையர் நேசமுமே அல்லும் பகலும் ஆடவர் கருத்தைக் கவர்ந்தன. உள்ளத்தை உருக்கி, ஊக்கத்தை உலைக்கும் கவலையென்னும் கடும்பிணி யறியாத அரக்கர் மதுவை மாந்தி மனம் களித்தார்கள்.

"பளிக்கு மாளிகைத் தலந்தோறும்
இடந்தோறும் பசுந்தேன்
துளிக்கும் கற்பகத் தண்நறும்
சோலைகள் தோறும்
அளிக்கும் தேறல் உண்டு
ஆடுநர் பாடுநராகிக்
களிக்கின்றார் அலால் கவல்கின்றார்
ஒருவரைக் காணேன்"

என்று அநுமன் அரக்கரது அணி நகரைப் போற்றிப் புகழ்ந்தான். சாலையினும், சோலையினும், மாடங்களினும், மற்றைய இடங்களினும், செந்தேன் உண்டு, செம்மாந்திருந்த ஆடவரல்லால் கவலையால் உள்ளமும் உடலும் குவிந்தார் எவரும் அந்நகரில் இல்லை. இவ்வாறு அகம் களித்த அரக்கர் காதல் புரியும் கன்னியரை நேசித்து எல்லையற்ற இன்பமுற்றார்.

"தேறல் மாந்தினர் தேனிசை
மாந்தினர், செவ்வாய்
ஊறல் மாந்தினர் இன்னுரை
மாந்தினர், ஊடல்
கூறல் மாந்தினர் அனையவர்
தொழுதெழு கோபத்து
ஆறல் மாந்தினர் அரக்கியர்க்
குயிரன்ன அரக்கர்"

என்று கவியரசர் கூறுமாறு மதுவை மாந்திய அரக்கர் மங்கையரது இன்னிசையையும் நுகர்ந்து இன்புற்றுக் காதலுரையாடிக் களிப்பாராயினர். அமரோங்கிய அமைதிக் காலத்தில் இவ்வாறு களித்தும் காதலித்தும் காலம் கழிக்கும் அரக்கரது உள்ளம் போர் ஒலி கேட்டபொழுது உயர்ந்து நிமிர்வதாகும். அவரது புயங்களும் அவ்வாறே பூரிப்பனவாம். போரென்ன வீங்கும் பொருப்பனைய அரக்க வீரரை,

"நாளில மதனின் உண்டுபேரென
நவிலின் அச்சொல்
தேனினும் களிப்புச் செய்யும்
சிந்தையர்"

என்று கம்பர் பெருமான் சிறப்பித்துரைத்தார். மாற்றாருடன் வீரப்போர் புரியும் படைத் தொழிலை மதுவினும் இனிமையாய் மதித்தார்கள். அரக்கரது போர்வெறி மதுவெறியினும் மாண்புற விளங்கிற்று. மன்னனது மன்றிலே தூங்கும் மத்தளம் காற்றிலசைந்து ஒலிக்கும் ஒலி கேட்டு அது போர்ப் பறையென்று மகிழும் வீரனது பெருமையை,

"பொதுவில் தூங்கும் விசியுறு தண்ணுமை
வளிபொரு தெண்கண் கேட்பின்
அதுபோ ரென்னும் என்னையுமுளனே"

என்று ஔவையார் போற்றிப் புகழ்ந்தார். இத்தகைய போர்வீரரே இலங்கை மாநகரில் நிறைந்திருந்தார்கள். படைத் தலைவர் ஆணைபெற்ற போர்வீரர், எய்திய துணராது ஏகுமிடமறியாது அணியணியாய் அடலேறு போல் விரைந்த ஆண்மையை,

"பொன்னின்றுகளுலும் செய்வப்பூணினர்
பொருப்புத் தோளர்
மின்னின்ற படையும் கண்ணும் வெயில்
விரிக்கின்ற மெய்யர்
என்னென் றார்க்கு என் னென்றார்
எய்திய தறிந்திலாதார்
முன்னின்றார் முதுகு தீயப்
பின்னின்றார் முடுகின்றார்"

என்று கம்பர் நயம்படக் கூறிப் போந்தார். என்ன நேர்ந்ததென்று வினவும் வீரருக்கு எதிர்மாற்றம் கூற இயலாது முன்னணியிலுள்ளாரது முதுகு தீயுமாறு பின்னணியிலுள்ளார் முடுகிச் சென்றார் என்று கவி கூறும் மொழிகளில் அரக்கரது அளவிறந்த வீரமும் படையொழுங்கில் அவர் அடங்கிப் பணி செய்யும் பான்மையும் இனிது விளங்கக் காணலாம். படைத்தலைவர் ஏவிய பணியை எதிர் வினவாது ஏற்று முடிக்கும் போர் முறை இலங்கை நாட்டில் இனிது திகழ்ந்ததென்பதற்கு இதுவே ஏற்ற சான்றாகும்.

*　　　*　　　*

இவ்வாறு அச்சம் விளைக்கும் அடலாண்மையொடு விளங்கிய அரக்கரது வில்லும், வேலும், வாளும், கதிர் ஒளியை எதிர்வீசிக் கண்ணொளியைப் பறித்தன. இப்படையின் பரப்பையும் சிறப்பையும் கண்ட இராம தூதன்,

"விற்படை பெரிதென்கோ
யான் வேற்படை மிகுமென்கோ, யான்
மற்படை யுளதென்கோ
யான் வாட்படை வலிதென்கோ, யான்
கற்பணம் தண்டு பிண்டி
பாலம் என்றிணைய காந்தும்
நற்படை உடைத்தென்கோ யான்
நாயகற் குரைக்கும் நாளில்"

என்று திகைத்து நின்றான். இந்நகரின் நீர்மையை நாயகனான இராமனுக்கு எடுத்துரைக்கும் நாளில், இங்கு விற்படை பெரிதென்பேனோ? வேற்படை பெரிதென்பேனோ? வாட்படை வலிதென்பேனோ? மற்படை மிகுமென்பேனோ? என்று திகைத்துநின்ற மாருதியின் மொழிகள் அரக்கரது படைவலியைப் பண்புற விளக்குவனவாம்.

*　　　*　　　*

இத்தகைய வீரர் மாற்றார் படைக்கலத்தாலடைந்த வடுக்களையே, பொன்னுலாய பதக்கத்தினும் அருமையாய்ப் பாராட்டினுர்கள். படைக்கல மிழைத்த தழும்புகளைப் பார்த்துப் பெருமிதமுற்றார்கள்.

"வானவர் எறிந்த தெய்வ
அடுபடை வடுக்கள் மற்றைத்
தானவர் துரந்த ஏதித்
தழும்பொடு தயங்கும் தோளர்"

என்று வீரரது தழும்புகளைக் கவி வியந்துரைக்கின்றார். மாற்றார் எதிர்நின்று போர் புரிந்து அவரது படைக்கலத்தை அஞ்சாது நெஞ்சிலேற்று ஆவிதுறத்தல் அழியாப்புகழாகுமென்பது அரக்கரது கருத்தாகும். இத்தகைய புகழை அன்னார் உயிரினும் உயர்வாய்ப் போற்றினார்கள். இணையற்ற வீரனாய இராமனைச் சேர்ந்து இம்மைச் செல்வமும் மறுமைச் செல்வமும் அடைந்து இனிது வாழுமாறு விரும்பி யழைத்த விபீஷணனை நோக்கி,

"தலைவன்நீ உலகுக் கெல்லாம்
உனக்கது தக்கதேயால்
புலையுறு மரண மெய்தல்
எனக்கது புகழதேயால்"

என்று கும்பகர்ணன் கூறும் வீரமொழிகள் அரக்க வீரனது மனப்பான்மையை நன்கு விளக்குவனவாம். இன்னும் இலங்கை வேந்தனது அருமைத் திருமகனை அக்கன் அநுமனது வலிமைக்கு ஆற்றாது அழிந்தான் என்றறிந்த மேகநாதன் கோபத்தால் கொதித்து,

"தம்பியை உன்னும் தோறும்
தாரைநீர் ததும்பும் கண்ணன்
வம்பியல் சிலையை நோக்கி
வாய்மடித் துருத்து நக்கான்
கொம்பியல் மாவ! வாழ்க்கைக்
குரங்கினால் குரங்கா வாற்றல்
எம்பியோ தேய்ந்தான் எந்தை
புகழன்றோ தேய்ந்த தென்றான்"

'கொம்பினில்வாழும் இக்குரங்கின் செய்கையால், என் தம்பியாய அக்கனே இறந்தான். அரக்கர் கோன் புகழன்றோ அழிந்தது' என்று வருந்தும் வீரனான மேகநாதனது மொழிகளும் அரக்கரது வீரப் புகழ் வாழ்க்கைக்கு விளங்கிய சான்றாகும்.

*　　　*　　　*

இவ்வாறு வீரப்புகழை விரும்பிய அரக்கர் அமர்க்களத்தில் மாற்றாரது வலிய படைகளால் மாள்வர[illegible] [illegible] வைத்த காலைப் பின் வைத்த [illegible] வும் வேண்டுமோ [illegible] படை[illegible] அரக்கர், அநுமனது அளவிறந்த ஆற்றலை அறிந்தபோதும், [illegible] அவனுடன் போர்புரிந்து [illegible] கருதின[illegible] அஞ்சி மீளக் கருதி[illegible]லர். அ[illegible] சேனை தோல்வி[illegible] செய்தியை, இலங்கை வேந்தனுக் [illegible] அரக்கருள் ஒருவனும் மீண்டு [illegible] அரக்க ரெல்லாம் அழிந்த[illegible] அறிவிப்பவர் அடிமைத் [illegible] யாரே யாவார். விலங் [illegible] முன்னே நின்று அரக்கர் [illegible] விளம்பவும் அஞ்சி விம்ம[illegible] கையினால் கட்டுரைத்த வானவரை [illegible]

"இறந்து நீங்கினரோ
இன்றேன் ஆணையை இகழ்ந்து
துறந்து நீங்கினரோ
வென்றி வெஞ்சமர் தோலைந்தார்

# இளைஞர்கட்கு உபதேசம்.

அறிஞர் வாஸ்வானியின் அரிய சொற்பொழிவு.

சில தினங்கள் முன் சென்னை திருவல்லிக்கேணி இந்து கல்விச்சாலை மண்டபத்தில் அறிஞர் வாஸ்வானி அவர்கள் அரியதோர் சொற்பொழிவு நிகழ்த்தினர். அதன் சுருக்கம் வருமாறு:—

## எனது கொள்கை.

நம் பாரத நாடு விடுதலை பெற்றுச் சுதந்திரமடைய வேண்டுமென்பதே எனது கொள்கையாகும். அக்கொள்கையில் எனக்கு முழு நம்பிக்கை உண்டு. இளைஞர்களது சக்தியினுற்றுன் (உழைப்பினுற்றுன்) நம் நாடு விடுதலை யடைய முடியும். பல சந்தர்ப்பங்களிலும் வயோதிகர்கள் சோர்வடைந்து விடுகின்றனர். நம் நாடு விடுதலை பெறுமா பெறுதா என்பதே அவர்களது சந்தேகமாகும். யான் எங்கு சென்ற போதிலும் அத்தகைய உணர்ச்சியையே தான் முதியோர்களிடம் காண்கின்றேன்.

## இளமை என்பது யாது?

இளமை என்பதற்குச் சக்தியென்பதே உண்மைப் பொருளாகும். அச் சக்தி இளைஞர்களிடம் மட்டுமே இருக்கின்றது. இதுவரை சுதந்திரமடைந்துள்ள நாடுகளெல்லாம் இளைஞர்களாலேயே அந் நிலை யடைந்துள்ளன. சுதந்திரம் அல்லது விடுதலை யென்பது ஒருவர் கொடுத்து மற்றொருவர் பெறும் பரிசல்ல. அவ்வாறு பரிசு மூலமாகச் சுதந்திரம் கிட்டிய போதிலும் அச் சுதந்திரம் நெடுங்காலம் நீடித்திருக்காது. அது தனமதிப்பை விளக்கக்கூடிய சுதந்திரமல்ல. சுதந்திரம் என்பது சட்ட சபைகள் மூலமாகவும், காகிதத் தீர்மானங்கள் மூலமாகவும், பொதுக்கூட்டப் பிரசங்கங்கள் மூலமாகவும், பார்லிமெண்டு சபைகள் மூலமாகவும் பெறக்கூடிய ஒன்றல்ல. சக்தியினுல் அடையக்கூடிய ஒன்றேயாம். இளைஞர்களது இதயங்களில் மட்டுமே சுதந்திரம் என்னும் சக்தி குடிகொண்டிருக்கிறது. இளைஞர்களே அச் சுதந்திரத்தினை அடைய முடியும்.

## ஜெர்மானிய வாலிபர்கள்.

ஜெர்மானிய வாலிபர்கள் ஏற்கனவே ஒன்று சேர்ந்து முன்னேற்றமடைந்து ஓர் சமூகத்தினராகி விட்டனர். சீன நாட்டு வாலிபர்கள் பல வருடங்களாகத் தம் தாய் நாட்டின் விடுதலைக்காகப் போராடி வருகின்றனர். பல கழகங்கள் கண்டு அவற்றின் மூலமாக அரிய தொண்டாற்றி வருகின்றனர். தங்களுள் கட்டுப்பாட்டையும் ஒழுங்கையும் இன்னும் விருத்தி செய்து கொண்டு வருகின்றனர். அரசியல் விவகாரங்களில் அவர்கள் செல்வாக்குப் பெற்றுவிட்டனர்.

## நம் நாட்டு வாலிபர்கள்.

நம் நாட்டு வாலிபர்களிடம் கட்டுப்பாடு ஒழுங்கு முதலியன இல்லை. வாய் அளவில் தேசபக்தி காட்டுவது நம் நாட்டில் வழக்கமாகிவிட்டது. கொரியா எனும் ஓர் சிறிய தேசத்தை எடுத்துக் கொண்டு கவனிப்போம். அது ஓர் சிறிய நாடு. பல ஆண்டுகளாக ஜப்பானியரது கொடுங்கோன்மைக்கு உட்பட்டுப் பல இன்னல்களை அனுபவித்து வந்தது. அந் நாட்டு வாலிபர்கள் நம்போன்று வாயளவில் தேசபக்தி காட்டாது, தம் தாய்நாட்டின் மானத்தைக் காக்கவும், விடுதலை பெறவும் உண்மை உணர்வு கொண்டு தேசபக்தி மேலிட்டு நாட்டிற்குத் தொண்டு புரிந்தனர். ஆனால் இந்திய நாட்டவர் சட்ட சபைகளில் பேசுவதாலும், பொதுக்கூட்டங்களில் சொற்பொழிவுகள் நிகழ்த்துவதாலும் விடுதலை பெற்று விடலாமென நம்பியிருக்கின்றனர். அந் நம்பிக்கை வீண் நம்பிக்கையேயாகும். நாட்டின் முன்னேற்றத்துக்குரிய நிர்மாணத் திட்டங்கள் தயாரித்து அத் துறைகளில் சற்றும் ஓய்வின்றி வேலை செய்தாலன்றி இந்திய நாடு விடுதலை பெறப் போவது இல்லை. நாமனைவரும் நிர்மாண திட்டத்தில் கவனம் செலுத்த வேண்டுவது அவசியமாகும். அதற்கென பாரத யுவர் சங்கமென ஓர் கழகம் காணப் பெற்றுள்ளது. அச் சங்கம் காகிதத் தீர்மானங்களோடு நின்று விடக் கூடியதல்ல, செயலில் எதையும் நிரூபிக்கும் தன்மையுள்ளது.

## கோரிய நாட்டு வாலிபர்கள்.

கொரிய நாட்டிலுள்ள வாலிபர்களனைவரும் ஒன்று சேர்ந்து நாட்டின் விடுதலைக்காகப் பாடுபட முன்வந்தனர். அவர்களனைவரும் கௌரவமான குடும்பங்களைச் சேர்ந்தவர்கள். அவர்கட்கு எல்லாவிதமான வசதிகளுமிருந்தன. அவ்வாறிருந்தும் அவர்கள் தமது சுகபோகங்களையும் பிறவற்றையும் பொருட்படுத்தாது தேசத்தொண்டு புரிய முன்வந்தனர். தம் தாய்நாடே யாவற்றிலும் மேம்பட்டதெனக் கருதலாயினர். கந்தைகளையும் அழுக்குத் துணிகளையும் புனைய முற்பட்டனர். ஒவ்வொரு கிராமத்திற்கும் சென்று அங்குள்ள ஏழை மக்களிடையே தீவிரமாகப் பிரசாரம் செய்தனர். பொது மக்களுக்கு ஓர்வித தேசிய உணர்ச்சியை ஊட்டுவித்தனர். அவர்கட்கு ஆண்டவன் அருள்கிட்டிற்று. தேசபக்தி மேலிட்டால் அவர்கள் தீவிரமாக வேலை செய்புங்காலத்துப் பலவித இன்னல்களுக்கு அவர்கள் உள்ளாக நேர்ந்தது. அவற்றைப் பொறுமையுடன் அனுபவித்தனர். அவற்றைக் கண்டு மனத்தளர்வு அடையவில்லை. இறுதியில் வெற்றி பெற்றனர். நம் நாட்டு வாலிபர்களோ கதர் ஆடை அணியவுங்கூட முன் வருவதில்லை. வெளிநாடுகளிலிருந்துவரும் ஆடைகளின் பகட்டைக்கண்டு ஏமாந்து அவற்றையே வாங்கி அணிகின்றனர். கொரியநாட்டு இளைஞர்கள் எத்தகைய முறையை மேற்கொண்டார்களோ அத்தகைய முறையை நம் நாட்டு வாலிபர்களும் மேற்கொண்டு நாட்டிலுள்ளாரனைவருக்கும் உற்சாகத்தை ஊட்டவேண்டும். கொரிய வாலிபர்கள் ஓர் வேளை உணவுமட்டுமே கொண்டனர். அவர்களது செலவுக்குப் போதிய பணமும் கிடையாது கஷ்டமனுபவித்தனர். எனினும் நாட்டுக்காக உழைக்கப் பின்வாங்கவில்லை. அதுவன்றோ உண்மை நாட்டுப்பற்று? அதனையே நீங்களும் பின்பற்ற வேண்டும்.

## நீகிரோவர்கள்.

அடுத்தபடியாக நீகிரோவர்களது விஷயங்களைக் கவனிப்போம். வாஷிங்டன், டுபாய் எனும் இரு தலைவர்கள் அவர்களிடையே தோன்றினர். இவ்விருவர்களில் டுபாய் என்பவர் அதிக கெட்டிக்காரர். ஆச்சரியமானதோர் மனிதன். பேசுவதில் உலகத்திலுள்ள அனைவரிலும் அவரே சமர்த்தரெனலாம். இவ்விரு தேசபக்தர்களும் நாட்டின் முன்னேற்றத்தைக்கருதிப் பொது மக்களுக்குத்தேசிய உணர்ச்சியையும், உற்சாகத்தையும் ஊட்டும்பொருட்டு தேசிய முறையில் கலாசாலை யொன்றைத் தோற்றுவித்துக் கல்வி போதித்து வந்தனர். இளைஞர்களனைவரையும் வசப்படுத்தி அவர்கள் தம்மைப் பின்பற்றும்படி செய்துகொண்டனர். அவர்கட்கு வேண்டிய வசதிகளை அவர்களே செய்துகொள்ளுமாறு அவர்களுக்குப் புகட்டினர். அவர்கள் காட்டிய ஊக்கத்தையும் நாட்டுப்பற்றையும் கண்டு மிஸ்டர் கிரஹாம் எனும் ஓர் ஆங்கிலேயர் வெகுவாக வியந்து கூறியிருக்கிறார். நீகிரோ வாலிபர்கள் தாம் முன்வந்து தம் தாய் நாட்டிற்காகச் செய்யவேண்டிய பணிகளைச் செய்யத் தயாராயிருப்பதாக அறிவித்தார்கள். அவர்கள் மிகுதியும் நம்பிக்கைகொண்டவர்களாகவிருந்தனர். நம் நாட்டு வாலிபர்களோ ஆத்திரமடைந்து அவசரப்பட்டு உணர்ச்சிபெறக்கூடியவர்களாக விருக்கின்றனர். பொதுக்கூட்டங்களில் இருக்கும்வரை உணர்ச்சி அவர்கள்பால் இருக்குமேயன்றி வீடு சென்றதும் அவ்வுணர்ச்சியை மறந்து தூங்கிவிடுகின்றனர். இத்தகைய உணர்ச்சியை நாம் மாற்றிக்கொள்ள வேண்டும். அவ்வித நிலைக்கு இடங்கொடாது, அவ்வுணர்ச்சியை நாம்வீண் செலவிடாது செயலில் காட்டவேண்டும். அதுவே சக்தி யென்பதன் அருமை பெருமையாகும். ஆத்திரத்தில் உணர்ச்சிகொள்வது நம் நாட்டில் வழக்கமாகிவிட்டது.

## இத்தாலிய வீரர்கள்.

இத்தாலி தேசத்தை இனி எடுத்துக்கொள்ளுவோம். அந் நாட்டில் மூன்று அறிஞர்கள் தோன்றினர். மாஜினி, கரிபால்டி, காவ்வின் எனும் அம்மூன்று பெரியார்களும் நாட்டு மக்களுக்குத் தேசப்பற்றை ஊட்டினர். சுதந்திரத்திற்காகப் பாடு பட்டவர்கள் அவர்களே. அவர்கள் அரசியல் வாதிகளல்ல சுதந்திர ரிஷிகளென்றே அவர்களைச் சொல்லவேண்டும். கரிபால்டி என்பவரை இத்தாலிய நாட்டு வாலிபர்கள் நன்கு நேசித்தனர். அவ்விளைஞர்களை நோக்கி, அவர்கள் தம் தாய் நாட்டிற்காகத் தியாகம் செய்ய வேண்டுமெனக் கூறினர். அவ்வாலிபர்கள் அவரை நோக்கி "நீங்கள் எங்களது தியாகத்திற்குக் கைம்மாறாக எங்களுக்கு யாது தரப்போகின்றீர்கள்" எனக்கேட்டனர். பசியையும், வறுமையையும், மாணத்தையும் தான் கைம்மாறாகத் தருவதாக கரிபால்டி தெரிவித்தார். இளைஞர்களனைவரும் தேசத்திற்குத் தொண்டுசெய்ய முன்வர வேண்டுமென்று அவர் கேட்டுக் கொண்டதும் அதற்கிணங்க வாலிபர்கள் முன்வந்தனர். இந்தியாவிலுள்ளவர்கள் நமது முன்னோர்களது சிறந்த கொள்கைகளையும் முறைகளையும் மறந்துவிட்டோம். ஆசிரம முறைகளைக் கைவிட்டு விட்டோம். தவத்தை மறந்தோம். இனியாகிலும் புராதன மான ஆசிரம முறையை நீங்கள் மேற்கொள்ள வெண்டுமென்று உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். தற்பொழுதுள்ள வாலிபர்கள் சுகவாழ்க்கையையே விரும்புகின்றனர். அக்கொள்கையினை அறவே விட்டொழிக்க வேண்டும்.

## ஜக்லுல்பாக்ஷா.

எகிப்து தேசத்தை அடுத்தபடியாகக் கவனிப்போம். அங்கு ஜக்லுல் பாக்ஷா வெனும் ஓர் வீரர் தோன்றினர். அவர் முஸ்லிம் கலாசாலையிலேயேதான் படித்துவந்தார். எகிப்திய நாட்டில் முஸ்லீம்கள் ஏராளமாக விருந்தபோதிலும் அங்கு வகுப்புவாதமென்பதே கிடையாது. நம் நாட்டிற்றுன் இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் பகைமையிருந்துவருகிறது. மசூதி முன் மேளம் வாசித்தல் கூடாதென எந்த நூலிலும் கூறப்படவில்லை. எகிப்து நாட்டில் அத்தகைய வாதங்கள் கிடையா. இதுவும் ஏனைய சச்சரவுகளும் சில்லரைச் சச்சரவுகளேயாகும். வகுப்புச்சண்டை சமூகவாதிகளையே பொறுத்ததாகும். நான் வகுப்புவாதியல்ல. அரசியல் வாதியுமல்ல. எனினும் வகுப்பு வாதத்தை நான் பலமாகக் கண்டிக்கிறேன். வகுப்புவாதம் தேசிய உணர்ச்சியை அழிக்கும் தன்மைகொண்டது. ஓர் சந்தர்ப்பத்தில் ஜக்லுல் பாக்ஷா அந்நாட்டு வாலிபர்களை நோக்கி, நாட்டிற்காக அர்ப்பணம்செய்யத் தனக்குப் புத்திரர்கள் இல்லையே என்றதும், அத்தேச வாலிபர்கள் தாங்கள் அனைவரும் தயாராயிருப்பதாக முன்வந்தனர். அதேபோல் நம் நாட்டு இளைஞர்கள் தம் பொறுப்பை உணர்ந்துகொள்ளவேண்டும்.

## உடல் உரம் வேண்டும்.

முதலாவதாக வாலிபர்கள் நல்ல திடசரீரிகளாக இருக்க முயற்சிக்க வேண்டும். உடல் நடமாடுங் கோயிலாகும். ஆகவே கடவுளை உங்கள் இதயங்களில் நிலைநாட்ட வேண்டும். இரண்டாவதாகத் தேசத் தொண்டு. ஆண்டவன் பலவிதங்களில்உங்களிடம் வருவார். ஏழைத் தொழிலாளிகளாகவும் விவசாயிகளாகவும் நம் முன் தோன்றுவார். பெரிய நகரங்கள் பல இருப்பதால் கிராமங்கள் நாசமாய் விடுகின்றன. கிராம வாசிகள் நகரங்களுக்கு வந்துசேர்ந்து தம்மையும் தம் தாய் நாட்டையும் மறந்து விடுகின்றனர். இந்தியாவின் எதிர்கால மதம் தொண்டு என்பதே யாகும். ஏழைகளுக்குத் தொண்டு செய்வதே கடவுளுக்குப் பிரீதியாகும் என்பதை நீங்கள் உணரவேண்டும்.

---

மறந்து நீங்கினரோ
 என்கொல் வந்ததென் றுரைத்தான்
நிறஞ் செருக்குற
 வாய்தோறும் நெருப்புமிழ் கின்றுன் "

வாயில் நெருப்புப் பொறி பறக்கும் வேந்தன், அஞ்சிவந்து வாய் குளறி நின்ற அமரரை நோக்கி, 'எனது வீரர்கள் இறந்து விழுந்தனரோ? அன்றி என் ஆணையை இகழ்ந்து அகன்றனரோ? அன்றி அமர்க்களத்தில் அயர்ந்துநீங்கினரோ?' என்று வினவியபோது வீரருக்குரிய முறையில் வீழ்ந்து உயிர்துறந்த அரக்கரது பெருமையை,

" சலம் தலைக் கொண்டனராய தன்மையர்
அலங் திலர்செருக்களத் தஞ்சினுரலர் "

என்று தேவர் அறிவிக்கும் திறம் அறிதற்குரியதாகும். 'கோபத்தாற் கொதித்துப் போர் புரிந்த அரக்கர் அமர்க்களத்தில் அயர்ந்தாருமல்லர், அஞ்சினருமல்லர்! அநுமனுடன் அமர்புரிந்து அனைவரும் ஆவி துறந்தார்கள்' என்று அறிவிக்கும் முறையில் அரக்கரது வீரத்தன்மை விளங்கக் காணலாம். இத்தகைய வீரம் வாய்ந்த அரக்கரது வேந்தனாய் விளங்கிய இராவணன், கண்ணுதற் பெருமான் வீற்றிருக்கும் கயிலை மலையைப் பெயர்த்து மதம் பொழியும் திசையானைகளின் மருப்பொசித்து மன்னர் மன்னனாய் விளங்கினன். வலிமையின் வரம்பு கண்ட இவ்வேந்தனும் அழியாப் புகழையே ஆவியினும் அருமையாய் ஆதரித்தான் என்பது அவ்வீரனது வாய்மொழியாலேயே அறியப்படுகின்றது. தந்தையான இலங்கை நாதனது ஆவியைக் காக்கும் ஆர்வத்தால் சீதையை விட்டுப் பகை விலக்[illegible]று வினயமாயுரைத்த மேகநாதனை [illegible]க்கி,

" வென்றிலன் என்றபே[illegible]
 வேத முள்ளளவும் ய[illegible]
நின்றுளான் அன்றே மற்றவ்[illegible]
 இராமன் பேர் நிற்குமா[illegible]
பொன்றுதல் ஒருகாலத்தும்
 தவிருமோ பொதுமைத்தன் [illegible]
இன்றுளார் நாளை மாள்வர்
 புகழுக்கும் இறுதியுண்டோ "

என்று எடுத்துரைத்த இலங்கேசன[illegible]ழ்களில் அரக்கரது வீரச் சுவை வ[illegible]க் காணலாம். இவ்வாறு வெற்றியினும் [illegible] பெரிதென்று கருதி, இராமனுடன் இட[illegible]யற்ற போர் புரிந்து ஆவி துறந்த இராவணனது வீர வாழ்க்கை வேதமுள்ளளவும் விளங்குமென்பதில் யாதும் ஐயமில்லை.



# வருணாசிரம தர்ம விவாதம்.

சென்னையில் நடைபெற்ற வர்ணாசிரம தர்ம மகாநாட்டில் திருவண்ணாமலை ஸ்ரீ காவ்யகண்ட கணபதி சாஸ்திரியாரவர்களை வாதத்திற்கழைத்துப் பின்னர் மகாநாட்டு அதிகாரிகள் அவரை மகாநாடு நடக்கும் கட்டிடத்திற்குள் அனுமதிக்க மறுத்தது குறித்து ஸ்ரீ சாஸ்திரியாரவர்கள் பத்திரிகைகட்கு எழுதியிருந்த கடிதம் மார்கழித் திங்கள் உஅ-ம் நாள் வெளிவந்த குமரனில் "இதுவோ வாதம்" என்ற மகுடத்தின் கீழ் வெளியிடப்பட்டிருந்ததை அன்பர்கள் அறிவர். பின்னர் அக் கடிதத்திற்கு விடையாக மகாநாட்டு வரவேற்பு சபைக் காரியதரிசியான ஸ்ரீ வத்ஸ ஸோமதேவ சர்மா ஓர் கடிதம் பத்திரிகைகட்கு அனுப்பியிருக்கிறார். அதற்குப் பதிலாக ஸ்ரீ காவ்யகண்ட கணபதி சாஸ்திரிகளும் ஓர் கடிதம் வரைந்துள்ளார். அவற்றை அன்பர்கள் அறியுமாறு கீழே பிரசுரிக்கின்றோம்.

## ஸ்ரீ வத்ஸ ஸோமதேவ சர்மா.

ஸ்ரீ வத்ஸ ஸோமதேவ சர்மாவின் கடிதம் வருமாறு:—

வருணாசிரம தர்மம் தன்னடக்கத்தைப் பெரும் தர்மம் என ஏற்கிறது. ஏனைய மகாசபைகளைப் போலில்லாமல் அநுபவ பூர்வமாகப் பலருக்குப் பயனளிக்கும் தன்மையில் இதன் உயரிய விசாலநோக்கத்தை உலகிற்குக் காண்பிக்கவே இச்சபையை இங்கு ஆரம்பித்தனம். ஸ்ரீஜகத்குரு கும்பகோணம் சங்கரபகவத் பாதாளது மிகத் திறமை வாய்ந்த அநுக்ரஹம் ஸ்ரீமான் யு. பி. கிருஷ்ணமாச்சாரியாருடன் சேர்ந்து இதை நடத்தும்படி என்னைத் தூண்டியது. கேவல ஸத்வகுணத்துடன் எவர் மனமும் நோகா வண்ணம் உண்மையை ஒளியாது முனிவரது சிறந்த கொள்கைகளை வெளியிடுவது என் கடமை எனக் கருதினேன். அதே கருத்துடன் ஏனைய பண்டிதர்களுடன் ஸ்ரீகாவ்ய கண்டருக்கும் அழைப்புக் கடிதமனுப்பினேன். அவர்களது அளவு கடந்த கவிதா சக்தியையும் யோக்யதையையும் யானறியாதவனல்ல. சில வருஷ காலமாக நெருங்கிப் பழகும்பாக்கியத்தையும்பெற்றுள்ளேன். தீண்டாமை விஷயத்திலும் மத மாறியவரைத் திரும்ப நம் மதத்தில் சேர்க்கும் விஷயத்திலும் தேசபக்தியிலும் மதாபிமானத்திலும் அவர் கொண்ட அவாவை யான் நன்கறிந்தவனே.

நாங்கள் கருதும்படி வேத சாஸ்திர ஸம்ப்ரதாய விரோதமாக அவைகள் தோன்றினமையால் சற்று ரஜோகுணம் கலந்தாலும் வாக்யார்த்த மூலமாக (அதாவது வாதம் செய்து) அதன் உண்மையை உலகிற்கெடுத்துரைப்பது எங்கள் கடமை என நிர்வாகக் காரியதரிசியினுல் வற்புறுத்தப்பட்டு எனது கையொப்பமுமிட்டு ஸ்ரீ காவ்ய கண்டருக்கும் கடலங்குடி ஸ்ரீ நடேசசாஸ்திரிகளுக்கும் வாதுபுரிய, கடிதம் அனுப்பினேம். கடலங்குடி சாஸ்திரிகள் ருதுமதி விவாஹம் கௌணபக்ஷமாக சாஸ்திரீயமெனக் கூறிவந்தார். ஆனல் எங்கள் கடிதத்திற்குப் பதிலளிக்கும்போது தானங்ஙனம் கூறியதில்லை யென்றுகூறவே அதோடு அது நிறுத்தப்பட்டது.

ஸ்ரீ காவ்யகண்டர் கடிதத்திற்குப் பதிலனுப்பியதும் அவர்களனுப்பியதும் ஸ்வராஜ்யாவில் துரதிருஷ்டவசமாக இடையில் நேர்ந்தஸம்பவத்துடன் வெளியாயிற்று. இதில் எனது கடமையைச் செலுத்தவே இதை எழுத நேர்ந்தது.

என்னைப் பற்றியவரையில் யான் வாதத்தில் நம்பிக்கையில்லாதவன். வாதம்புரியவும் விரும்பாதவன். ஸ்ரீகாவ்யகண்டரை உள்ளே அழைத்து வாதகாலம் வரை கௌரவமாகவே மற்றவர்களைப் போல் உட்காரவைக்க வேண்டுமென என் நண்பருடன் வாதித்தேன். ஓர் சட்டத்திற்கு எல்லோரும் உட்பட வேண்டுமெனக் கூறி அவரதை மறுத்தார். இங்ஙனமேதான் பாரதத்தாயின் அரும்புதல்வரான பண்டித மாளவியாவையும் நடத்துவார்போல் தோன்றியது. ஆனல் ஸ்ரீ மாளவியாவின் அபார சுதந்திரமும் ஒப்பற்ற விநயமும் கையெழுத்திடாமல் அவரை உள்ளே வரவேற்கும்படி செய்தது. ஸ்ரீ காவ்யகண்டரைப் போலவே முதலில் கையெழுத்திட்டு பின்னர் "வியாக்யானம் செய்தபடி புராணகமங்களுடன்" என்ற பாகத்தை அடித்துவிட்டார். ஆனதால் அவர் கோரியபடி ஸபையிடையே அவருக்கும் பேச இடமளிக்காமல், மாலையில் சபை தவக்குவதற்கு முன் அவகாசமளிக்கப்பட்டது. அச்சமயத்திலும் ஸ்ரீ மாளவியாவுடன் வந்த ஸ்ரீகாவ்ய கண்டர் உள்ளே விடப்படவில்லையெனக் கேட்க மிக மனத்துயரடைந்தேன்.

ஸ்ரீ சாஸ்திரிகளிடம் நான் நேரில் சொன்னபடி அவருக்குக் கடிதமனுப்ப வேண்டுமென யான் கூறியபோது தான் நேரில் இரவில் நடக்கும் பண்டித பரிஷத்திற்கு வரும்படி அவாளிடம் கூறியதாகவும் ஸ்ரீ மாளவியாவும் ஸ்ரீ சாஸ்திரிகளும் வருவதால் தக்க பண்டிதர்களைக் கொண்டு வாக்யார்த்தம் (வாதம்) செய்ய ஏற்பாடு செய்யும்படியும் என்னிடம் ஸ்ரீ. யு. பி. கிருஷ்ணமாசாரியார் கூறினர். அங்ஙனமே எனது கடமையை யான் செய்து அ- முதல் கக-மணி வரையில் இருவர்களையும் எதிர்பார்த்தேன். எவரும் வரவில்லை. கடிதம் வரவில்லை என்பது காவ்யகண்டரது குறை. நேரிலழைத்தும் அவர் வரவில்லை என்பது நிர்வாக காரியதரிசியின் முறையீடு. மறுபடியும் வாதம் புரிய சபை கூடுவதானல் பாதிச் செலவை ஸ்ரீகாவ்ய கண்டர் ஏற்க வேண்டுமென யு. பி. கி. ஆச்சாரியார் சொல்கிறார்.

என்னைப் பற்றியவரையில் ஏற்கனவே ஸ்ரீ சாஸ்திரிகளது ஜாகையில் நேரே யான் கண்டு பேசிய வண்ணம் வர்ணாசிரம தர்மத்தில் ஈடுபட்டு ஒரே துறையில் முனைந்து செல்லும் இருவருக்கும் ஒரு சிறு விஷயத்தில் ஏற்படும் அபிப்பிராயபேதம் அரசியல் துறையில் வீண்வாதமிட்டு எதிரிக்கு இடமளிப்பதுபோல் இருக்கலாகாதென்பதே எனது பூர்ண அபிப்ராயம். ஆகலால் இடையில் நேர்ந்த ரஜோகுண காரியத்தை மறந்து முன் போலவே முதலில் மதப்பணியும் பின்னற் தேசப்பணியும் புரியும்படி ஸ்ரீ சாஸ்திரிகளை அநேக நமஸ்காரங்களுடன் தாழ்மையாக வேண்டுகிறேன்.

## ஸ்ரீகாவ்யகண்டகணபதி சாஸ்திரிகள்.

ஸ்ரீகாவ்யகண்டகணபதி சாஸ்திரியாரவர்கள் கீழ்க்காணும் விடை அனுப்பியுள்ளார்:-

ஸ்ரீமான் ஸ்ரீவத்ஸ ஸோமதேவசர்மா எழுதிய கடிதத்தைப்பார்த்தேன். அதில் நடவாத ஒரு விஷயத்தைப்பற்றித், தப்பாகக் கேள்வியுற்று ஸ்ரீசர்மா எழுதியிருக்கின்றபடியால் நான் இக்கடிதம் எழுத வேண்டிய அவசியம் நேரிட்டது. நான் உக-உ- காலையில் சபைக்குப்போய் பிரவேசிக்க வொட்டாமல் தடுக்கப்பட்டபோது, வாதத்திற்குத் தகுந்த ஏற்பாடு அவர்கள் என்ன செய்கின்றுர்களோ அதை அன்று சாயங்காலத்துக்குள் எனக்குத் தெரிவிக்கவேண்டுமென்று ஸ்ரீ சர்மாவோடு சொல்லி என் விலாசத்தையும் அவரிடம் கொடுத்து வந்துவிட்டேனே தவிர திரும்பவும் ஸ்ரீ பண்டித மாளவியாஜியோடு நான் போகவேயில்லை. பண்டிதஜி ஈ௳ தேதி வர்ணாசிரம மகாநாட்டுக்குப் போயிருந்ததாக அவரோடுகூடப் போயிருந்த ஸ்ரீமான் கல்பாத்தி வேசபந்து அன்றுசாயங்காலம் என்னிடம் சொன்னர். ஸ்ரீமாளவியாஜி உபந்யாஸத்திற்குப் பண்டிதர்கள் அன்றிரவு பதில் சொல்லவதாகக் காரியதரிசியினுல் சொல்லப்பட்டதாம். ஆனல், அன்றைக்கே கல்கத்தாவிலிருந்து தந்தி வந்திருந்தபடியால் பண்டிதஜி அன்றிரவு புறப்பட்டுப் போய்விட்டாரென்றும் அதனல் அவர் சபைக்குப் போக முடியவில்லை யென்றும் ஸ்ரீ வேசபந்து எனக்குச் சொன்னர். அன்றிரவு ஸ்ரீ சர்மாவும் ஸ்ரீமான்யு.பி.கிருஷ்ணமாச்சாரியாரும் பண்டிதஜீ நிமித்தம் காத்துக்கொண்டிருந்திருக்கலாம். அவர்கள் வாத அழைப்புப் பிரகாரம் சரியான மத்யவர்த்திகள், பிரதிவாதி முதலிய ஏற்பாடுகள் செய்ய சித்தமாயிருப்பதாக ஒரு சமாசாரமும் என்னிடம் நேரகவோ கடிதமூலமாகவோ அறிவியாமல் எனக்காக அவர்கள் காத்துக்கொண்டிருந்ததாகச் சொல்வது மிகவும் ஆச்சரியமாயிருக்கிறது.

ஆங்கிலப் பத்திரிகையில் ஸ்ரீமான் யு. பி. கிருஷ்ணமாச்சாரியார் வேறு முறையாகச் சமாதானஞ் சொல்கிறார். ஈ௳-ந் தேதியில் என்பக்ஷத்தாரான சில வாலிபர்களிடம் மத்யவர்த்திகளை ஏற்பாடு செய்வது கஷ்டமென்றும், இரு பக்ஷத்தாரும் தாராளமாக நீண்டகாலம் வாதம் செய்தால் யாருடைத் போகின்றுர்களோ அவர்கள் தோல்வியடைந்ததாக நினைக்கப்படலாமென்றும் சொன்னுராம். அவருடைய வாத அழைப்பாலிழுக்கப்பட்டுக் காத்துக்கொண்டிருக்கும் எனக்கு அதுவே பதில் சொல்லி யனுப்பியதாக ஆகு மென்றும் அந்த வாலிபர்கள் அவ்விஷயத்தை எனக்குச் சொல்லாமற் போயிருக்கலா மென்றும் அதனல் அவர் மேல் தப்பு ஒன்றுமில்லையென்றும் சொல்லி அவர் திருப்தி யடைகின்றுர். மதாரஸில் என் கொள்கையை ஆதரித்த வாலிபர்கள் எவ்வளவோ பேர்கள் இருக்கலாம். நான் யாரையும் தகவல் தெரிந்து கொள்வதற்காக அவரிடம் அனுப்பவில்லை.

அதுவுந் தவிர ஸ்ரீ யு. பி. கிருஷ்ணமாசாரியாருக்கு, மத்ய வர்த்திகளை ஏற்பாடு செய்வது கஷ்டமென்று நான் அவர்களுடைய மகாநாட்டிற்குப் போனபிறகுதான் ஆலோசனை யேற்பட்டது போலும். அவர், தாமெழுதிய முதல் கடிதத்தில் மத்யவர்த்தியை யேற்பாடு செய்வதாகவும் இரண்டாவது கடிதத்தில் ஜூரிபோல் மத்யவர்த்திக் கூட்டத்தை ஏற்பாடு பண்ணிக்கொள்ளலாமென்றும் எழுதினர். உக-ந் தேதி காலையில் ஸ்ரீ சர்மா, அவர்களுடைய உ-வது லிஸ்டின் ஸம்பந்தமாக, ஜூரியில் பாதிப் பேர்களை அவர்களும், பாதிப்பேர்களை நானும் எண்ணிக்கொள்ளலாமென்று சொன்னர். நான் அதை அங்கீகரித்து அப்படிப்பட்ட ஜூரிகள் முன்னிலையில் நான் என் எதிரியோடு வாதிக்கத் தயாராயிருப்பதாக ஸ்பஷ்டமாக சொன்னேன். ஸ்ரீ சர்மாவும் ஸ்ரீகிருஷ்ணமாசாரியாரோடு கலந்து சாயங்காலத்திற்குள் எனக்குப் பதில் தெரிவிப்பதாகச்சொன்னர். அதற்கு ஸ்ரீகிருஷ்ணமாசாரியாரின் பதிலை நான் மூன்று நாள் எதிர்பார்த்தும் யாதொருபதிலும் கிடைக்கவில்லை. இப்பொழுது அவர்தம் பதிலை என் பக்ஷத்தாரான ஏதோ சில வாலிபரிடம் ஈ௳-யில் சொல்லி விட்டாரென்று இந்த பத்திரிகை மூலமாயறிந்தேன்.

இது இப்படியிருக்க, ஸ்ரீ ஆசாரியார், "மறுபடியும் நீ வாதத்தைப் பற்றிப் பேசுகிற பக்ஷத்தில் வாத சபைக்குத் தேவையான பணச் செலவில் பாதி நீ ஏற்றுக் கொள்ளவேண்டும்" என்று என்னை பயமுறுத்துகிறாம். அட்டகாசமாக இந்த வாதப்ரஸ்தாவனையைக் கிளப்பினவர் யார்?

# மகாத்மாவின் மாண்பு.

சென்ற வாரத்திய 'யங் இந்தியா' வில் திரு. மகாதேவ தேசாய் எழுதியிருக்கும் ஓர் கட்டுரையின் சாரம்:—

சென்ற ஒரு வருஷ காலமாக காங்கள் கூண்டிலிருந்து விடுபட்ட பறவைகளைப் போன்று திரிந்து கொண்டிருந்தோம். கடந்த சில தினங்களுக்கு முன்புதான் ஓய்ந்து ஆய்ந்து ஆசிரமம் வந்து சேர்ந்தோம். பிப்ரவரி மார்ச்சு மாதங்களில் மகாத்மாஜி சுற்றுப்பிரயாணம் செய்வதாக இருந்ததை அகில பாரத சர்க்கா சங்கத்தார் தற்காலமாக ஒத்தி வைத்திருக்கின்றனர். இதனல் காந்திஜிக்கு ஆசிரமத்தில் இடைவிடாத ஓய்வு ஏற்படும்.

ஆனல் ஓய்வு என்றல் யாதொரு வேலையும் கிடையாது என்று எவரும் எண்ண வேண்டாம். இக்காலத்தில்தான் அவர் ஆசிரமத்தின்வேலைகளைக்கவனித்துத் தம்மைத் தாமே பரிசோதித்துக் கொள்ளுவார். ஆசிரமத்தில் நாங்கள் கவனிக்கவேண்டியிருக்கும் பல விஷயங்களில் வருஷா வருஷம் ஏற்படும் மலேரியா நோயும் ஒன்றாகும். இதன்காரணமென்னஎன்பதையும் இதைத் தடுப்பது எங்ஙனமென்பதையும் பற்றி நாங்கள் வைத்தியர்களைக் கேட்டோம். அதற்கு அவர்கள் கொசுவலையின் உதவியைக் கொண்டு கொசுக்களின் உபாதையினின்றும் நீங்குவதே தகுந்த வழி என்றனர்.

'எல்லோராலும் எப்படிக் கொசு வலை வாங்க முடியும்? ஏழைகளுக்கு வேறு வழி கிடையாதா?' என்று காந்திஜி கேட்டார். வைத்தியர்கள் வேறொரு வழியும் உண்டென்றனர். அதாவது தேகத்தைச் சரியாக மூடவேண்டும். முகத்தின்மீது மண்ணெண்ணெயைத் தடவிக்கொள்ள வேண்டும். காந்திஜி அநேகமாகக் கொசு வலையை உபயோகிப்பதுண்டு. ஆனல் ஏழைகளாலும் செய்யக்கூடியது ஒன்றுளது என்று கேள்விப்பட்டதும் அவர் தம்முடைய கொசு வலையை அப்புறப்படுத்தும்படி கட்டளை யிட்டு விட்டு, படுக்கைக்குச் செல்வதற்கு முன் தமது முகத்தின்மீது மண்ணெண்ணெயைத் தடவிக் கொள்ளுகிறார். ஒரு வஸ்துவை வாங்க முடியாமலிருப்பவர்களை விடத் தங்களால் வாங்க முடியுமான நிலையிலிருக்கையிலும், ஏழைகளை உத்தேசித்து அந்த சுகத்தை வெறுத்து இருப்பவர்களே உண்மையான ஏழைகள்.

சென்ற வாரத்தில் மற்றொரு ருசிகரமான சம்பவமும் நடந்தது. நாங்கள் கடவுளைக்குறித்துத்தியானிப்பதற்காக உட்கார்ந்திருந்த கூட்டங்கள் ஒன்றில் காந்திஜி, "இப்பொழுது நான் உங்களுக்கு ஒரு விஷயத்தைப்பற்றிச் சொல்லப் போகிறேன். ஓர் தவறுதல் நடந்திருக்கின்றது. அதில் நம்மில் மூவர் சமமான பங்காளிகள். ஏன்? நான் ஆசிரமத்தின் தலைவனுதலால் அதில் என் பங்கு அதிகமானது. நான் தலைவனுயிருந்தும் அஜாக்கிரதையாய் இருந்தேனல்லவா?" என்று கூறினர். இது என்ன சமாசாரம் என்று எங்களில் பலருக்குத் தெரியவில்லை. ஆனல் காந்திஜி தம் வழக்கம்போன்று தம்முடைய தவறுகளை எல்லாம் நன்றாக விளக்கிச் சிறிது மிகைபடவே எங்களுக்குக்கூறினர். நடந்த விஷயம் இதுதான்.

காந்திஜியின் அறையைப் பார்த்தவர்களுக்கு அது தெரியும். பக்கத்திலுள்ள சுவற்றுக்கும் மேல் கூரைக்கு மிடையே வலை போன்ற சல்லிக்கம்பிகளிருக்கின்றன. இது காற்று வருவதற்காக வைக்கப்பட்டிருக்கின்றது. ஆனல் வெயில் காய்கையில் இதன் மூலமாக மகாத்மாவின் முகத்தின் மீது சூரியனின் கிரணங்கள் விழுகின்றன. ஆகையால் வெயில் வரவொட்டாமல் அவ்விடத்தில் எதையாவது தடையாக வைக்கும்படி காந்திஜி கூறினர். ஒரு நண்பர் வெளியேபோய் ஓர் தச்சனை அழைத்து வந்தார். 'அவ்விடத்தில் ஓர் பலகையை மூடியாக வைத்துவிடலாமா' என்று அவன் கேட்க இதற்குக் காந்திஜி இசைந்தார். ஆனல் தச்சன் தன்னுடைய வேலையை ஆரம்பித்தவுடனே அவன் செய்வது சரியானதல்ல என்று காந்திஜிக்குத் தோன்றிவிட்டது. அவர் இதைப்பற்றி யோசித்தார். தவறுதலில் கலந்துகொண்ட நண்பர்களிடம் இதைப்பற்றி அவர் முதலில் கூறிவிட்டு ஸ்திரீகளிடம் சென்னர். கடைசியில் தியானக் கூட்டத்திலும் பகன்றார்.

அவர் கூறியதாவது:— "ஏழ்மைத் தன்மையான வாழ்க்கையைநடத்துவதென வாக்குறுதி செய்து கொண்டிருக்கும் நாம் இப்படிச் செய்திருக்கக் கூடாது. ஒரு அட்டையோ அல்லது துணியோ போதுமானதென்று எனக்குத் தோன்றி யிருக்கவேண்டும். இதை விட்டு விட்டு நாம் பலகைக்கு எதற்காக இரண்டு ரூபாய் கொடுக்கவேண்டும்? அட்டை, அல்லது துணி என்றல் அது சாதாரணமானது. அதிக விலையில்லை. அவற்றை வைத்து ஆணியை அடித்து விட்டிருக்கலாம். இந்த மாதிரி சாமானியமான விஷயங்களில்தான் நம்முடைய கொள்கையும், யோக்கியதையும் பரீக்ஷிக்கப்படுகிறது. உள்ளத்திலும் ஏழ்மைத்தன உணர்ச்சியைக் கொண்டவனுக்குத் தான் சுவர்க்கம். ஆதலால் நாம் இனிமேல் நமது தேவைகளையும் விருப்பங்களையும் குறைத்துக் கொண்டு ஏழைகளைப் போல் வாழக் கற்றுக்கொள்ள வேண்டும்."

கதர் ஊழியத்தில் சேர்ந்திருப்பவர்களில் ஒருவர் ஓர் நாள் தம்முடைய குறையை நிவர்த்தித்துக் கொள்ளுவதற்கு மகாத்மாஜியினிடம் சென்றார். தமக்கு அதிகக்கோபம் வருவதாகவும், ஆதலால் தாம் உபவாசமிருந்து தம்மைப் பரிசுத்தப் படுத்திக் கொள்ளப்போவதாகவும் அவர் கூறினர். "நான் எச்சரிக்கை செய்கிறேன். உபவாசம் எப்பொழுதும் பாவங்களுக்கு விரோதமாகமாட்டாது. பாவத்தினின்றும் தப்ப வேண்டுமானல் கடவுளிடம் சரணாகதி அடையவேண்டும். இதற்கு உதவியாக உபவாசத்தைச் செய்யலாமே யொழிய ஏனைய வேளைகளில் கூடாது. நான் இதைவிடச் சிறந்த வழியொன்று சொல்லுகிறேன். நீர் யார்மீது கோபம் கொண்டீரோ அவரிடம் சென்று மன்னிப்புக் கேட்டுக் கொள்ளும். இதற்காக என்ன செய்யவேண்டுமென்று கேட்டு அவர் கூறுவதைச் செய்யும்" என்று கூறினர். நண்பர் அங்ஙனமே சென்று செய்தார். "ஆனல் இச்சந்தர்ப்பத்தில் தவறு இழைக்கப்பட்டவர் என் செய்யவேண்டும் தெரியுமா? அவர் மன்னித்து விடவேண்

(௬-ம் பக்கம்.பார்க்க.)

(௬-ம் பக்கத் தொடர்ச்சி.)

...ம். மன்னித்தல் என்பது தைரியசாலிக ...ின் ஆபரணமெனக் கூறப்பட்டிருக்கின் ...து. ஆனல் மன்னிப்பு என்றால் என்ன? ...த்வீகமாயிருத்தல், அடித்த அடியைவாங் ...க்கொண்டு சும்மா இருப்பதோ? அதுவா ...தற்குப் பொருள்?" என்று காந்திஜி ...றினர்.

ஓர் நாள் மாலையில் இதுபற்றி விவாதம் ...ந்தது. காந்திஜி கூறியதாவது:— சாத்வீக எதிர்ப்பின்மைப் பேச்சு நம் தேசிய வாழ்வில் ஓர் நஞ்சாக இருக்கிறது. மன்னித்தல் என்பது ஆன்மாவின் குணமாகும். கோபத்தைக்கோபமின்மையால் வெல்லென் ...ர் புத்தர். கோபமின்மை என்பது என்ன? அது தயை அல்லது அதிக அன்பு என்று பொருள். இந்த உத்தம குணத்தை நீங்கள் வளர்க்கவேண்டும். இக்குண முடையவன் கோபித்தவரிடம் சென்று அவன் கோபத்துக்குக் காரணம் என்ன என்று விசாரித்து அவரது கோபத்துக்குத் தாம் காரணமாயின் அதைத்திருத்திக் கொண்டு பிறகு அதற்காகக் கோபிப்பது தவறு என்று குறிப்பிடுவார். இத்தகைய அன்பை விடாமல் அப்பியசித்தால் ஒவ்வொருவரும் நன்மை பெறலாம்.

---



















## நமது தபாற்பெட்டி

### கதர் நிதி.

கதர்நிதிக்கு அடியில்கண்ட தொகைகள் மிக்க நன்றியுடன் வரப் பெற்றேன்:—

அலோர்ஸ்டார் (கெடா) செட்டியார்கள் ரூ. ௧௩௦. மைனங் P. S. P. M. R. செல்லப்பா செட்டியாரவர்கள் ரூ. ரு௦. ஆகமொத்தம் "குமரன்" மூலம் ரூ. ௧அ௦. தபாற் செலவு ரூ. ௧—௧௪—௦போக ரூ. ௧எஅ—உ—௦, என்று சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார் எழுதுகிறார்.

### கோலப்பிரை.

கோலப்பிரை நமசிவாயத் தமிழ்த் தரும பாடசாலை:—இப்பாடசாலையின் இரண்டாம் ஆண்டு நிறைவு விழா ௧அ—௧உ—உஎ ஞாயிற்றுக் கிழமை கொண்டாடப்பட்டது. மூன்றரை மணிக்கு கூட்டம் ஆரம்பித்து ஐந்தரை மணிக்கு நிறைவெய்தியது. அவ்வமயம் ஸ்ரீ உமையவள் இந்து சபா அங்கத்தினர்களால், பஜனை செய்யப்பட்டு, மாணவிகளாகிய சீ. ஆதிலக்ஷ்மி, அன்னபூரணம், லக்ஷ்மி, சுந்தரம், மாணவர்களாகிய சு. சொக்கலிங்கம், சீனிவாசன், கந்தசாமி, அமிர்தம் ஆகியவர்களால் 'கடவுள்' 'ஸ்தோத்திரம்,' 'கல்வி,' 'சிவாலய தரிசனவியல்,' 'புண்ணியபாபவியல்', 'உத்தமமாணாக்கர்கள்,' பாடம் நன்ருய்ஒப்புவித்தல்,' 'ஒற்றுமை,' 'பொய்சொல்லாமை' என்பன பற்றிய சம்பாஷணை நன்கு நடிக்கப்பட்டது. இத்தரும பாடசாலை மென்மேலும் தழைத்தோங்குமாறு இறைவனை வேண்டுகிறேன், என்று ஸ்ரீ உமையவள் இந்துசபா காரியதரிசி எழுதுகிறார்.

### பேரா.

அனுதாபக் கூட்டம்:— ஸ்ரீமாந் தாப்பா இராமசாமிசெட்டியாரவர்கள் தேகவியோகமடைந்ததுபற்றி லோயர் பேரா இந்திய சங்கத்தில் ௧௦—௧—உஅ அன்று மாலை ரு மணிக்கு ஓர் கூட்டம் கூட்டப்பெற்றது. அதுகாலை ஆங்கிலோ சைனீஸ் ஸ்கூல் தலைமை உபாத்தியாயர் ரெவரெண்டு கனம். எம். ஆர். துரைச்சாமி அவர்கள் அக்கிராசனம் வகித்தார்கள். அ. ரெத்தினமும் கு. ரெத்தினசாமியும் சித. சோம. உலக சுந்தரனும் சோகமீறப் பேசினர்கள். உலகசுந்தரன் பேசுகையில்திரு செட்டியாரவர்களின் அருமை பெருமைகளைக் குறிப்பிட்டு விட்டு இறுதியில் அவருடைய ஆன்மா சாந்தியடையுமாறு ஸ்ரீ சர்வேஸ்வரனுடைய ஒப்பற்ற திருவடிகளைப் பன்முறை பிரார்த்திப்பதுடன் ஸ்ரீமான் செட்டியாரவர்களின் குடும்பத்தினருக்கும் நமது சங்கச்சார்பில் இந்நூளாரின் அனுதாபத்தைக்கடிதமூலம் வரைந்தனுப்புவோமாக, என்று பேசி முடித்தார். ௬—௧௦ மணிக்கு தலைவரவர்கள் சுமார் அரை மணி நேரம்வரை முடிவுரைகூற சபை கலைந்தது, என ஒரு அன்பர் அறிவிக்கிறார்.

### கோ. லேட்சுமிபுரம்.

ஸ்ரீ மீனுக்ஷி சங்கம்:— இச் சங்கத்தின் இரண்டாவதாண்டு ஒன்பதாவது மாதக் கூட்டம் நாளிது தைத் திங்கள் எ-ம் நாள் வெள்ளிக்கிழமை மாலை ௬ மணிக்கு சொக்கலிங்க வித்தியாசாலை மாணவர் மாணவிகளால் கடவுள் வாழ்த்துப் பாடப்பெற்று இந்நகர் திருவாளர் சொ. மு. பெ. அரு. அருணசலன் செட்டியாரவர்கள் தலைமையில் ஆரம்பமாகியது. அஞ்ஞான்று இந்நகர் திருவாளர்களான ந. சொ. அருணசலஞ் செட்டியார் "அமர்நீதி நாயனர்" என்பதுபற்றியும், ராம. குழந்தைவேலன் (சொ. வி. மாணவன்) "பொய்" என்பதுபற்றியும், சுவாமிமலை சாம்பமூர்த்தி பாகவதரவர்கள் "பக்தி" என்பதுபற்றியும் சொற்பொழிவு நிகழ்த்தினர்கள். பின்னர் தலைவரவர்கள் நீண்டநேரம் பலமேற்கோள்களுடன் முடிவுரை பகர்ந்தார்கள். ஷெ வித்தியாசாலை மாணவர்களால் கடவுள் வாழ்த்தும் மாணவிகளால் கோலாட்டமும்நடைபெற்றன. தலைவரவர்கட்கு மாலை சூட்டி சந்தன தாம்பூலம் கற்கண்டு வழங்கப்பெற்று சபை ௬-மணிக்கு இனிது நிறைவெய்தியது, எனக்காரியதரிசி திரு. ந. சொ. அருணசலன் எழுதுகிறார்.

### தேவகோட்டை.

இரண்டாவது ஆண்டு நிறைவு விழாக் கொண்டாட்டம்:— இவ்வூர் நகரத்தார் உயர்தரக் கல்லூரி மாணவர் சங்கத்தின் உ-வது ஆண்டின் நிறைவு விழாக் கொண்டாட்டம் இவ்வூர் ஹைஸ்கூல் ஹாலில் நாளிது ஜனவரி மீ உ௦-உ மாலை ரு-மணிக்கு வக்கீல் ஸ்ரீமான் டி. ஜி. ராமசாமி அய்யங்கார் தலைமையின்கீழ் நடைபெற்றது. அநேக பெரிய மனிதர்கள் விஜயம் செய்தனர். மாணவர்களிடத்தில் அன்பும், அவர்களுக்கு எப்பொழுதும் தன் உதவியை அளிப்பவருமாகிய ஸ்ரீமான் ஸி. சுந்தாமய்யர் (ஸ்கூல் காஸ்பாண்டெண்டு) அவர்களும் வந்திருந்தனர். இந்தக் கொண்டாட்டத்தில் நடந்த ஒவ்வொரு விஷயமும் மாணவர்களாலேயே நடத்தப்பட்டது என்பது மிகவும் பாராட்டத்தக்கது. மாலை ௪-௩௦ மணிக்கு சங்க மெம்பர்களுக்கு சிற்றுண்டி அளிக்கப்பட்டது.

இங்கிலீஷ், தமிழ், சமுஸ்கிருதம் கடவுள் ஸ்தோத்திரங்களுடன் கொண்டாட்டம் ஆரம்பிக்கப்பட்டது. பிறகு காரியதரிசிகளில் ஒருவராகிய திரு. பசுபதி வருஷாந்திர அறிக்கையைப் படித்தார். பிறகு திரு. சங்கரன் "ஏழைக்கு உபகாரஞ் செய்தல்" என்னும் விஷயத்தைபபற்றியும், திரு. ராமசாமி "என் தேசம்" என்னும் விஷயத்தைப் பற்றியும் ஸ்வாமி விவேகானந்தர் சொற்களில் ஆங்கிலத்தில் பேசினர்கள். பிறகு ரவீந்திரநாத்தாகூர் அவர்களியற்றிய தியாகம("Sacrifice") என்னும் நாடகத்திலிருந்து சில காக்ஷிகள் மாணவர்களால் ஆங்கிலத்தில் நடிக்கப்பட்டன. தலைவர் தன்பின்னுரையில் மாணவர்களியற்றிய சொற்பொழிவுகளையும், நாடகத்தில் நடந்த மாதிரியையும்பற்றி வெகுவாகப் புகழ்ந்துபேசி, மாணவர்களுக்குச் சில புத்திமதிகளைச் சொன்னர். பிறகு தேசீய கீதங்கள் பாடப்பட்டன. அக்கிராசனருக்கும் காஸ்பாண்டட் அவர்களுக்கும மாலை போட்டபின்னர் வந்த னோபசாரம் தலைமையாசிரியர் அவர்

(௬-ம் பத்தி பார்க்க.)

---

அரியக்குடி ஸ்ரீமாந் வெ. ராம. நா.
இராமசாமி செட்டியாரவர்கள் மீது பாடிய

## இரங்கற் பாக்கள்.

[மேலச்சிவபுரி சொக்கலிங்கன், டேவுக்கான்ஸன்]

பெருமைபெறு மரியநகர் தனில்வாழ்ந்த நாரணப
பெரியோ னளித்த செல்வா
பெற்றதாய் தெய்வமென வென்னளு மெண்ணியே
பெயருற்ற வணிக பூமா
கருமைபெறு மேகமென நம்பினோர் யார்க்குமே
கருணைமழை பொழிகாவலா
கார்வண்ண னுறைதிருப் பதிசேனி வாசகக்
கண்ணனவதார னையா
அருமைபெறு தெங்குமா பலவினொடு செண்பகம்
மாத்தியிரு வாட்சி முதலா
யணிமலர்ச் சோலை செறிதாப்பா நகர்க்குமன்
னவனென்ன வாழ்ந்த கோவே
உருமைபெறு போரகர்க்கு நான் வருவலென
மோதிவிடு கடிதவுண்மை
யொளிகுன்றி விணிலே போன தென்மாயமோ
வோது சீராமவேளே! (௧)

சிரமமொடு பிளவையது கண்டுநீ பரபதஞ்
சென்றதை மனந்தேறுமோ
தெளிபொழிவு மழைமுகங் காணுத பயிர்போல
திகைக்கிறோம் கருணைநிறையே
வரமுடைய மானிடப் பிறவிதனில் நிகரிலா
வள்ளலே நாங்கள் கூட
வருகிறோம் வந்தாலு மடியேங்கள் காணவும்
வாய்க்குமோ வார்த்தைகூருய்
பரமபத முற்றவா வறுமைபிணி தீமையெம்
பக்கலில் லாதுகாத்தாய்
பாரிலுனை யன்றியொரு துணையில்லை யென்னவே
பாவித்திருந்தோ மெமை
மாம தெனவுன்பிரிவு கேட்டோர் திகைக்கவே
வானுலகு சென்ற கோவே
மனமாறி யெவ்விதந் தாங்குவோ முன்னுயிர்
மகிழ்சாந்தி பெற்றுய்கவே! (உ)

---

## நமது தபாற்பெட்டி

(௬-ம் பத்தித் தொடர்ச்சி.)

களாலும், காரியதரிசிகளில் ஒருவராகிய கே. ஆர். ராமசாமியாலும் சொல்லப்பட்டது. பிறகு கூட்டம் கலைந்தது. மறுநாள் இரவு ௯-மணிக்கு "மார்க்கண்டேயர்" என்ற புண்ணிய சரித்திரம் மாணவர்களால் தமிழில் வெகு விமரிசையாக நடிக்கப்பட்டது, என சங்கக்காரியதரிசி எழுதுகிறார்.

### புதுவயல்.

சுயமரியாதைப் பிரசங்கம்:—காரைக்குடி ஜில்லா பார்ப்பனரல்லாதார் இளைஞர் சங்கச் சார்பில், இம்மதி ரு-ம் நாள் புதன்கிழமை இரவு எ-மணிக்கு புதுவயல் பிள்ளையார்கோவில் பக்கத்தில் திருவாளர் ஆவி லெ. அருணசலம் செட்டியாரவர்கள் தலைமையில் ஓர் பொதுக்கூட்டம் கூட்டப்பெற்றது. அப்போது திருநெல்வேலி திரு. கே. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் "பார்ப்பனக் கொடுமை" எனும் பொருள் பற்றி அரியதோர் சொற்பெருக்காற்றினர். இரண்டாவதாக திருவனந்தை, திருவாளர் ம. நடராஜன் அவர்கள் "சுயமரியாதை இயக்கம" எனும் பொருள்பற்றிப் பேசினர். பின்னர் திருவாளர்களான திருபுவனம் நாராயணசாமி அவர்களாலும், வி. ஜி. நாயர் அவர்களாலும், சுயமரியாதை இயக்கத்தை ஆதரித்து அரிய சொற்பெருக்குகள்நிகழ்த்தப்பட்டன. இறுதியாக தலைவர் அவர்கள் பெரும் ஆவேசத்துடன் முடிவுரை கூறினர். பிறகு வந்தன வாழ்த்துடன் கூட்டம் கலைந்தது.

இளைஞர் சங்கம்:— இச் சங்கத்தின் முதலாவது ஆண்டு விழா இம்மதி ரு-ம் நாள் புதன் கிழமை மாலை ரு-மணிக்கு அள. குப. ஆங்கில கலாசாலையில், திருவாளர் அ. வீ. சேஷகிரி சாஸ்திரி அவர்கள் தலைமையில் நடந்தது. அத்தருணம் திருவளர் செல்வர்களான கும. ராம. குமரப்பன், நா. சேது, சுப. இராமநாதன், சுப. வீரப்பன், சோம. தியாகராஜன், சித. ராம. குமரப்பன் ஆதியோர் முறையே 'பக்தி,' 'உண்மை,' 'மனம்,' 'பெரியாரைப் பிழையாமை,' 'தொண்டர் பெருமை', 'செய்நன்றி அறிதல்' என்னும் விஷயங்கள் பற்றிப் பிரசங்கித்தனர். பின்னர், காரைக்குடி திரு. ஆவி. லெ. அருணசலம் செட்டியாரவர்கள் "பெரியபுராண மும்மணிகள்" எனும் பொருள்பற்றிப் பேசுங்கால், திலகவதியார், மங்கையர்க்கரசி, காரைக்காலம்மையார் என்னும் மகளிர் திலகமென விளங்கிய மூவரின்பெருமையை நன்கு விளக்கி, அவர்கள் அடிபற்றிட நம் பெண்டிர் ஒவ்வொருவரும முன் வருதல் வேண்டுமென்று உரைத்தனர். கடைசியாக, "ஞானசம்பந்தர்" எனும் பொருள்பற்றித் திருவாளர் அ. சுப. சோமசுந்தரம் செட்டியாரவர்கள் பிரசங்கித்தபின்னர், தலைவர் அவர்கள் கதாப்பிரசங்கம் செய்தாற்போல் நீண்ட காலம் பிரசங்கியார்கள் ஒவ்வொருவரையும் புகழ்ந்தும், வடமொழியிலிருந்து பல மேற்கோள்கள் காட்டியும், தமதுமுடிவுரையை அழகுபெறக் கூறியதும் வந்தன வாழ்த்துடன் கூட்டம் இனிது நிறைவெய்தியது. சங்க அங்கத்தினர்களாகிய இளைஞர்கள் ஊக்கம் மிகப் பாராட்டத்தக்கதெனவும், தக்கார் மேற்பார்வையில் இவர்கள் பயில்விக்கப்படின், சமூகத்திற்கும் நாட்டிற்கும் நன்மை பயக்கத் தக்கப் பெரியாராய் அவர்கள் திகழ்வதில் ஐயமில்லை என்றும் ஒரு அன்பர் அறிவிக்கிறார்.

## அயலகம்.

நாளிது தை மாதம் ௨௮-ந்தேதி சனிக்கிழமை யன்று பிணுங்கிலும் நீர்கொழும்பிலும் தைப்பூசவிழா ஆரம்பமாகும்.

ஃ ஃ

௧௯௨௮, ௨௯-ல் பிரிட்டனுக்காக ௨0 க்ரூஸர்களும், ௯ டெஸ்ட்ராயர்களும், ௬ ஸப்மரின்களும் கட்டப்படுமாம்.

ஃ ஃ

கொழும்பு சட்டசபை சுதேச மருந்தை விருத்திபண்ண ஒரு ஆலோசனை சபை ஏற்படுத்த ௭௰000 ரூபாய் அனுமதித்திருக்கிறது.

ஃ ஃ

அல்பேனியா நாட்டில் எவரும் ஒரு மனைவிக்குமேல் மணந்துகொள்ளக்கூடாதென்று சட்டபூர்வமாய் திட்டஞ் செய்திருக்கிறார்கள்.

ஃ ஃ

ஜனவரி மாதம் ௧௯-ந்தேதி ந்யூயார்க்கில் கிப்ளிங் இயற்றியுள்ள "லட்டர்ஸ் ஆப்மார்க்" என்ற நூலின் முதல்பாகத்தின் வெளியீடு ௪0௯00 பவுனுக்கு விற்கப்பட்டதாம்.

ஃ ஃ

வழுக்கைத் தலையில் மிக மெல்லிய தங்கக் கம்பியை வைத்து மயிர் நட்டுவிடக்கூடுமாம். இவ்வாறு நட்ட மயிர் நரைக்கவும் நரைக்காதாம். வளரவும் வளராதாம். உண்மை மயிர்போலவிருக்குமாம்.

ஃ ஃ

பீஜியைச் சேர்ந்த நியூ ஹெப்ரிடியில் ஒரு கடை வெடி குண்டினால் தீப்பற்றி எரிந்துபோயிற்று. நஷ்டம் ௨ லட்சம் பவுனென்றும், உயிர்ச்சேதமும் உண்டென்றும் ஒரு செய்தி எட்டுகிறது.

ஃ ஃ

ஜெர்மனியில் வொயில் கிளஞ்சன் என்ற இடத்தில் ஒரு இரும்பு வார்ப்புச்சாலையில் திடீரென்று இரும்பு உருக்கும் தொட்டி ஒன்று வெடித்து கொதித்துத் தத்தளித்துக் கொண்டிருந்த இரும்பு, தொழிற்சாலை முழுதும் பரவிப் பல தொழிலாளருக்குப் விபத்து நேர்ந்தது.

ஃ ஃ

பொது உடைமை அரசாங்கத்தை வீழ்த்துவதற்கு ரோமாபுரியிலுள்ள கிறிஸ்துவ ஜகத்குருவாகிய "போப்" பண உதவி செய்ததற்காக அவருக்குத் தூக்குத்தண்டனை விதித்திருப்பதாக ஒரு உத்திரவு சோவியத் சர்க்காரிடமிருந்து கிடைத்திருப்பதைக் கண்டு நகைப்பும் ஆச்சரியமும் அப்"போப்"பிற்கு உண்டாயதாம்.

ஃ ஃ

ஐக்கிய மலாய் நாட்டைச்சேர்ந்த பேரா கவர்ன்மெண்டுக்கு இப்போது தைப்பிங் தலைநகராக விளங்குகிறது. கூடியசீக்கிரம் ஈப்போவைத் தலைநகரமாகச் செய்யக்கூடுமென்றும் எல்லாக் கவர்ன்மெண்டு ஆபீசுகளும் அங்கு கட்டப்பெறுமென்றும், இதனால் ஈப்போவிலுள்ள நிலங்கள், வீடுகள் முதலியவற்றின் விலை ஏறிவருகிறதென்றும் தெரிகிறது.

ஃ ஃ

பெரிய குற்றத்திற்கும் தன் வேலையைச் சரிவரச் செய்யாததற்கும் ஒரு மாணவனை ஒரு பள்ளிக்கூடத்துத் தலைமை உபாத்தியாயர் நான்கு பிரம்படிகள் கொடுக்கலாம் என்றும் அப்படிப் பிரம்படி கொடுக்கும் விவரங்களைப் பதிவு செய்ய வேண்டுமென்றும் கொளும்பு கல்வியிலாகாத் தலைவர் உத்தரவு பிறப்பித்திருக்கிறார்.

ஃ ஃ

ஆகாயத் தந்தி மூலம் சமாசாரங்கள் அனுப்பப்படுவது போல் சில மைல்களுக்கப்பாலிருந்து நம்முடன் பேசுபவரையும் பார்க்க முடியுமாம். சமீபத்தில் ந்யூயார்க்கில் ௯0மைல் தூரத்திலிருந்துகொண்டு யந்திர வேலைசெய்பவரையும் பாடும் ஒருஸ்திரீயையும் ஒரு தட்டின் மூலமாகக் காண்பித்தார்களாம்.

ஃ ஃ

டெரில்லி யென்ற பிரஞ்சு டாக்டர் காலராவுக்கு ஒரு திராவகம் கண்டுபிடித்திருக்கிறார். காலராவால் ௧00-க்கு ௬0பேர் மரணமாவதை ௧00-க்கு ௬ ஆக அம் மருந்தினால் குறைத்திருக்கிறார். அம் மருந்தைக் கொண்டு இந்தியாவிலும் பரீக்ஷை செய்ய பிரிட்டிஷ் அரசாங்கத்தார் அந் டாக்டரை இந்தியாவுக்கு அனுப்பியிருக்கிறார்கள்.

## தாயகம்.

மத்திய மாகாண சட்டசபையில் அரசியல் கமிஷன்பகிஷ்காரத்தீர்மானம்ஓட்டுக்கு விடப்பட்டு நிறைவேறியது.

ஃ ஃ

திருவாங்கூரிலிருந்து அயல்நாடுகளுக்கு ஆண்டுதோறும் ௫0௰000 தோல்கள் அனுப்பப்படுகின்றன.

ஃ ஃ

ஐக்கிய மாகாண கவர்னர் பிப்ரவரி மாதம் ௨௨-ம் தேதி லக்ஷ்மணபுரியில் புதிய சட்டசபைக் கட்டிடத்தைத் திறந்துவைப்பார்.

ஃ ஃ

சிலதினங்கள் முன் அலகபாத்தில் ஸர். தேஜ் பகதூர் சாப்ருவின் வீட்டில் ரூ. ௪0000ம் பெறுமான சொத்துக்கள் திருட்டுப்போயின.

ஃ ஃ

சில தினங்கள் முன் ஒலவக்கோட்டிற்குப் பக்கத்தில் ஒரு சிவன் கோவில் தீப்பற்றி எரிந்ததை ஒட்டி ஒருவனைக் கைது செய்திருக்கிறார்கள்.

ஃ ஃ

ஸ்வாமி சிரத்தானந்தரைக் கொலைசெய்த அப்துல்ரஷீத்தின் வசமிருந்த துப்பாக்கியின் சொந்தக்காரரை லாகூர் இரகசியப் போலீசார்கள் கண்டுபிடித்து விட்டார்களாம்.

ஃ ஃ

கோட்டயத்தின் பக்கத்தில் ஒரு மோட்டார் பஸ் கலுங்கில் ஏறி குடை கவிழ்ந்து விழுந்தது. ஒருவன் உடனே மாண்டான். பலருக்குப் பலமான காயம் ஏற்பட்டது.

ஃ ஃ

இந்திய மன்னர்களுக்கு உதவிசெய்ய வந்திருக்கும் ஸர். லெஸ்லி ஸ்காட்டிற்கு மொத்தம் ௫௯௫00 பவுனும் தினம் ௨00 பவுன் அதிகப்படியும் கொடுக்கப்படுமென்று தெரிகிறது.

ஃ ஃ

'தியாகபூமி' என்ற ஹிந்தி மாதாந்தரப் பத்திரிகையை வெளியிடும் சாஸ்திர ஸாஹித்திய மண்டலத்திற்கு இந்தூர் சமஸ்தானம் ௫000 ரூபாய் கொடுத்திருப்பதாகத் தெரிகிறது.

ஃ ஃ

காஷ்மீர மகாராஜா லாகூரில் வெளியாகும் 'மிலாப்' 'குருகந்தாளம்' 'பிரதாப்' 'காஷ்மீர்' ஆகிய பத்திரிகைகள் தமது சமஸ்தானத்துள் வரக்கூடாதெனத் தடுத்திருக்கிறதாகத் தெரிகிறது.

ஃ ஃ

சாந்தன்பூர் என்ற விடத்தில் இரண்டு சாமான் வண்டிகள் மோதிக்கொண்டதால் ஒரு வண்டியின் 'கார்டு' இறந்து போனார். இது சம்பந்தமாக விசாரணை நடத்தப்பட்டு உதவிஸ்டேஷன் மாஸ்டர் ஸ்ரீமான் கோஷ் ௨00 ரூபாய் அபராதம் விதிக்கப்பட்டார்.

ஃ ஃ

காசி முனிசிபல் கவுன்ஸிலர் ஒருவர் பிப்ரவரி மாதம் ௯-ந் தேதி விளக்கு வசதி, தண்ணீர் வசதி செய்து கொடுக்கும் காரியாலயம், சுங்கச்சாவடி ஆகியவைகள் தவிரவனையவற்றை மூடிவிடும்படி ஒரு தீர்மானம் கொண்டுவரப் போவதாக அறிவித்திருக்கிறார்.

ஃ ஃ

இந்திய மாணவர்களுக்குக் கட்டாயமாக தேகப் பயிற்சி கற்பிக்க வேண்டுமென்றும் துப்பாக்கிப் பிரயோகம் செய்யக் கற்றுக்கொடுக்க வேண்டுமென்றும் ஒரு மசோதாவைச் சட்டசபையில் கொண்டுவர டாக்டர் மூஞ்சே அனுமதி கேட்டார். ஆனால் அரசப் பிரதிநிதி அதற்கு அனுமதி யளிக்கவில்லை.

ஃ ஃ

சில தினங்கள் முன் காசி வித்யாபீடரஸ்தாவிலுள்ள காந்தி ஆஸ்ரமமும் அதன் கடைகளும் போலீசாரால் சோதனையிடப்பட்டன. கடைசியில் ஒன்றும் கிடைக்கவில்லை. ஆஸ்ரமத்திலிருந்து மட்டும் சில கடிதங்களைக் கைப்பற்றினர். ஆஸ்ரமத் தலைவர் திருவானர் அகில சந்திரர் கைது செய்யப்பட்டார் எனத் தெரிகிறது.

ஃ ஃ

திருவனந்தபுரத்தைச் சேர்ந்த கண்டநாட்டில் ௧0௯ வயதுள்ள ஒரு கிறிஸ்துவ மாது சுகமாய் வாழ்ந்து வருகிறாள்.

ஃ ஃ

வங்காள மாகாணத்தில் நவம்பர் மாதத்தில் மட்டும் ௪௫௧௨ பேர் வாந்திபேதியால் பீடிக்கப்பட்டனர் எனத் தெரிகிறது.

ஃ ஃ

நாகர் கோயில் முனிசிபாலிட்டியார் அம் முனிசிபாலிட்டி வேலைக்காரர்களுக்கு கதர் உடைகொடுக்கத் தீர்மானித் திருக்கிறார்கள்.

ஃ ஃ

வங்காளத்தில் டிசம்பர் மாதம் ௨௪-ந் தேதி முதல் ஜனவரிமாதம் ௭-ந் தேதி வரை ௫௭ கொள்ளைகள் நடந்திருப்பதாகத் தெரிகிறது.

ஃ ஃ

இந்திய ஸினிமா விசாரணைக் கமிட்டி சென்னையிலிருந்து இரங்கூன் போய்ச் சேர்ந்து அங்கு விசாரணை நடத்திவருகின்றது.

ஃ ஃ

நாளிது ஜனவரீ௴ ௧௮ யன்றுகோலார் தங்க வயலிலிருந்து ௮,௯௯,௫0௨-௧0-0 பெறுமான தங்கக் கட்டிகள் பம்பாய்நாணயச்சாலைக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன.

ஃ ஃ

பம்பாய் மாகாண இளைஞர் முதலாவது மகாநாடு ஜனவரீ௴ ௧௧-யன்று ஸ்ரீமான் கே. எப். நாரிமன் தலைமையில் பம்பாயில் கூடியது.

ஃ ஃ

டில்லியில் நடைபெற்ற ரோட்டு அபிவிருத்திக் கமிட்டிக்கு இந்தியாச்சட்டசபை அங்கத்தினரான லாலாலஜபதிராய் விஜயம் செய்திருந்தார். இது காங்கிரஸ் தீர்மானத்திற்கு விரோதமாகும்.

ஃ ஃ

கள்ளிக்கோட்டை நகரிலுள்ள ஒருவன் தன் மூன்று பெண் குழந்தைகளை மலபார் கிரேட் இந்தியன் வர்க்கஸ் கம்பெனிக்கு ரிஜிஸ்தார் ஆதாரவுப்படி விலைக்குக் கொடுத்திருக்கிறான் எனத் தெரிகிறது.

ஃ ஃ

டில்லி பாரிஸ்டரான ஜனாப் அஸப் அலி, விவசாயக் கமிஷன் அங்கத்தினர்களில் ஒருவரான ஆசிரியர் கங்கூலியின் சகோதரர் புத்திரியான மிஸ் கங்கூலியை கலப்பு விவாகச் சட்டபடி கலியாணம் செய்து கொள்ளப் போவதாகத் தெரியவருகிறது.

ஃ ஃ

௧௯௨௫-௵ ஜனவரீ௴ ௧-உ முதல் ௧௯௨௬-௵ முடிய இரண்டு வருடங்களில் இந்தியாவில் அரசியல் நோக்கத்துடன் ௧௯ ஐரோப்பியர்கள் கொல்லப்பட்டும் ௨௨ ஐரோப்பியர்கள் தாக்கப்பட்டும் இருக்கின்றனரென்று அரசாங்க அறிக்கை ஒன்று கூறுகிறது.

ஃ ஃ

அமிர்தசரசில் முஸ்லிம் மாணவர்களுக்கும் ஹிந்துமாணவர்களுக்கும் ஹாக்கி விளையாட்டுப் பந்தயம் நடந்தது. ஒருவரையொருவர் தோற்கடிக்க முடியவில்லை. பின்னர் அடி தடி ஆரம்பமாகிவிட்டது. ஒரு முஸ்லிம்மாணவருக்கும் ஒரு சீக்கிய மாணவருக்கும் பலத்தகாயம் ஏற்பட்டுவிட்டது எனத் தெரிகிறது.

ஃ ஃ

சில தினங்கள் முன் ஆமதாபாத்தில் ஒரு மார்வாரி கள்ள நாணயங்களைக் கடையில் கொடுத்து ஏமாற்றியதாகக் குற்றஞ் சாட்டப்பட்டு அம் மார்வாரியை ஒரு போலீஸ் சேவகன் பரிசோதனை செய்யும் பொழுது மார்வாரி அக்கள்ள நாணயங்களை வாயில் போட்டு விழுங்கிவிட்டான். சேவகன் மார்வாரியின் வாயில் கையைவிட்டுப் பரிசோதிக்கையில் எதிரி சேவகன் கையைக் கடித்துவிட்டானும். எதிரியை ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோய் எக்ஸ்ரேயைக் கொண்டு சோதித்ததில் நாணயங்கள் வயிற்றிலிருப்பதாகத் தெரிந்தன. நான்கு தடவை பேதிக்கு மருந்துகொடுத்தும் நாணயங்கள் வெளிவரவில்லை என ஒரு செய்தி கூறுகிறது.

## தமிழகம்.

திருவண்ணாமலையில் ஜனவரீ௴ ௨௧-உ காலை ௯-௪௫ க்கு பூகம்பம் ஏற்பட்டது. ஆனால் சேதம் ஒன்றுமில்லை.

ஃ ஃ

ராமேஸ்வரம் தேவஸ்தானத்தை ஹிந்து தேவஸ்தான பரிபாலன போர்டினின்றும் விலக்கி விட்டதாகத் தெரிகிறது.

ஃ ஃ

சேலத்தில் இந்து முஸ்லிம் சச்சரவு மிகுதியாயிருக்கிறதாம். அதை ஒட்டி ஊர்வலம் முதலியவை ௧௪௪-வது பிரிவுப்படி தடுக்கப்பட்டிருக்கின்றன.

ஃ ஃ

சில தினங்கள் முன் சென்னை எழும்பூர் ரயில்வே ஸ்டேஷனில் டிக்கட்டுப் பரிசோதனை நடந்தது. சுமார் நாற்பது பேர்கள் வரை டிக்கட்டில்லாதவர்கள் அகப்பட்டுக் கொண்டனர்.

ஃ ஃ

சென்னை மாகாண பிராமணரல்லாதார் புதிய கட்சியொன்று ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. அதற்குத்தலைவர்கள் ராவ்பகதூர் ஸர் கே. வி. ரெட்டி, ராவ்பகதூர் டாக்டர் சி. நடேச முதலியார்.

ஃ ஃ

ஒரு தேசிய கலாசாலை ஆரம்பிக்கும் பொருட்டு, தம் பெயரை வெளியிட வேண்டாமெனச் சொல்லி லட்ச ரூபாயை சாது வஸ்வானி யிடம் ஒரு வியாபாரி கொடுத்திருப்பதாகச் சென்னை பாரத யுவர் சங்கக் காரியதரிசி வெளியிட்டிருக்கிறார்.

ஃ ஃ

சுவாமிமலை ஆலயத்தில் அபிஷேகத்திற்காகக் கொடுக்கப்படும் சாமான்களின் கிரயத்துக்கு ௧00-க்கு பனிரெண்டரை வீதம் உண்டியலுக்குக் கமிஷன்கொடுக்கவேண்டுமென்று ஒரு நூதன வரி ஏற்பட்டிருப்பதாகத் தெரிகிறது.

ஃ ஃ

சைமன் கமிஷன் இந்தியாவில் வந்திறங்கும் தினமாகிய பிப்ரவரி மாதம் ௩-ந் தேதி யன்றும், சென்னைக்கு வரும் தேதியாகிய பிப்ரவரி மாதம் ௧௭-ந் தேதியன்றும் வேலை நிறுத்தம் செய்ய சென்னையில் பணம் வசூலிக்கப்பட்டு வருகிறது.

ஃ ஃ

திருப்பதிக் கருகிலுள்ள திருச்சானூரிலும், காளஹஸ்தியிலும் காலரா நோய் அதிகமாக ஏற்பட்டிருக்கின்றது. சிவராத்திரி முதலியவற்றை முன்னிட்டுச் செல்லும் யாத்ரீகர்கள் காலராவினால் பீடிக்கப்படக்கூடுமென்று ஜில்லா சுகாதார உத்தியோகஸ்தர் அறிவிக்கிறார்.

ஃ ஃ

௧௯௨௮-ம் வருஷம் ஜனவரி மாதம் முதல் தபால் சூப்ரின்டெண்டுகள், போஸ்டுமாஸ்டர்கள், குமாஸ்தாக்கள் முதலிய எல்லோருக்கும் சம்பளம் உயர்த்தப்பட்டிருக்கின்றது. ஆனால் எளிய தபால்காரர்கள், கீழ்த்தர சிப்பந்திகள் இவர்களுக்கு சம்பளம் உயர்த்தப் படவில்லை.

ஃ ஃ

சென்னைக் கவர்மெண்டின் சட்ட மெம்பராகஇருக்கும் ஸர் சி.பி. இராமசாமிஐயரின் காலம் முடிவதால் அவர்க்குப் பின் யார் வரக் கூடுமென்பது குறித்தே எங்கும் பேச்சாயிருக்கிறது. இந்த ஸ்தானத்திற்கு திவான் பகதூர் ஓ. தணிகாலஞ் செட்டியார், ஸ்ரீமான் டி. ஆர். வெங்கட்டராமய்யர் ஆகிய இருவரின் பெயர்கள் சிறப்பாகக் குறிப்பிடப்படுகின்றன.

ஃ ஃ

ஜனவரீ௴ ௨-ந்தேதி எழும்பூர் ஸ்டேஷனில்திருவனந்தபுரம்எக்ஸ்பிரஸில், அதிகாரிகளின் குழப்பத்தால் பிரயாணிகள் சத்யாக்கிரகஞ் செய்து வெற்றிபெற்றது முன்னமே வெளியிடப்பட்டது. மேற்படி பிரயாணிகள் ஏறியிருந்த மூன்று வண்டிகளையும் பல்லாவரத்தில் கழட்டி விட்டுப் பார்சல் வண்டியோடு இணைத்துவிட்டார்களாம். இதனால்பிரயாணிகள் தம்உறவினர், சாமான்கள் முதலியவற்றை விட்டுத் தவிக்க நேர்ந்தது. விழுப்புரம் வந்ததும் இதை யறிந்த மிஸ்டர் ரௌபாதம், மேற்படி மூன்று வண்டிகளுக்கு மட்டும் ஒரு ஸ்பெஷல் இன்ஜினையும் கார்டு வானையுஞ் சேர்த்து டேப்ளிகேட் திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸாக ஓடுமாறு செய்தனர். மற்ற எல்லாவண்டிகளையும் விட இதுவே மதுரைக்கு முதன் முதல் வந்தது.



# தேவகோட்டை மாணவர் சங்க ஆண்டு விழா.

தலைவர்

## திரு. வ. உ. சிதம்பரம் பிள்ளையின் அரிய சொற்பொழிவு.

(நமது விசேஷ நிருபரிடமிருந்து)

தேவகோட்டை தை ௧௩—

தேவகோட்டை மாணவர் சங்கத்தின் எட்டாவது ஆண்டுவிழா இன்று மாலை [illegible]-மணிக்கு நகரத்தார் ஹாலில் ஆரம்பமாயிற்று. ஸ்ரீமான் தே. வே. முத்தையா செட்டியாரவர்களால் வந்தனோபசாரப் பத்திரம் படித்துத் தலைவருக்குக் கொடுக்கப்பட்டது. காரியதரிசி எட்டாவதாண்டு அறிக்கையை வாசித்தார். பின்னர் தலைவர் தமது முகவுரைப் பிரசங்கத்தைச் செய்தார். அதன் சாரம் வருமாறு:—

மாணவர்களே! நண்பர்களே!

இவ்வூர் மாணவர் சங்கத்தின் ஆண்டு விழாவில் தலைமை வகிக்கும் தகுதியுடையவனல்லேன். மாணவர் சங்கங்கள் எங்கே, எங்கே உள்ளனவென்று விசாரித்து அங்கு செல்வதும், அதனைப்பார்ப்பது, அன்னோர் சொல்வதைக் கேட்பது என்னும் கோட்பாடுடையவனாகலின் இங்குவர இசைந்தேன். சமீப தேதியைக் குறிப்பிட்டு வர வேண்டுமென என்னைக் கேட்ட பொழுது, 'பெரியோர்களுக்கு அவகாசமில்லை போலும், எனவே நம்மை அழைத்திருக்கின்றனர். ஆகலான் நாமும் போக மறுப்பது நியாயமன்று' என எண்ணியே வர இசைந்தேன். வரவேற்புப் பத்திரத்தில் என்னைப்பற்றிக் கூறப்பட்டிருப்பவை அனைத்தும் என்பாலுள்ள அன்பின் காரணமெனவே எண்ணுகிறேன்.

### அன்பும் ஒற்றுமையும் வேண்டும்.

எட்டாவதாண்டு அறிக்கையில் கூறப்பட்டிருப்பவைகளைக் கேட்டு இன்புற்றேன், அவைகள் அனைத்தும் தேசத்தார் உள்ளத்தில் பதிந்திருக்க வேண்டுவன. முதல் நோக்கத்தில், "சிறப்புவகையால் தனவைசியருள்ளும் பொதுவகையால்எல்லோருள்ளும் அன்பையும் ஒற்றுமையையும் வளர்த்தல்" என்று கூறப்பட்டிருக்கிறது. அன்பும் ஒற்றுமையும் தற்பொழுது நமது நாட்டில் இல்லை. தனவைசியருள்ளும் ஒற்றுமை நிலவியிருப்பதாகக் கூறமுடியாது. மற்ற சமூகத்தினரிடத்தில் மேற்கூறிய இரண்டும் மிக மிகக் குறைவாயிருக்கின்றன. நாம் தாழ்ந்திருப்பதற்குக் காரணம் என்ன? அன்பும் ஒற்றுமையும் இல்லாமையே யன்றி வேறன்று. இம் முதல் நோக்கம் நமது தேசத்திற்கும் உலகத்திற்கும் நன்மையளிப்பதாகும். நமது நாட்டில் ஒற்றுமை நிலவியிருக்குமானால் நாம் இன்றிருக்கும் தாழ்ந்த நிலையில் இருக்க மாட்டோம். எனவே இம்முதல் நோக்கம் நன்கு பரவி பயனளிக்க வேண்டுமென இறைவனைப் பிரார்த்திக்கிறேன்.

### தமிழ் மொழி உயர்ந்ததே.

இரண்டாவது நோக்கம் "அறநூல்கள் கூறும் நெறிவழி நின்று ஒழுக்கமுடையோராகவும், எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகுவோராகவும் இருந்து வருதல்" என்பதாகும். இதிலும் மனிதர்களுக்கு இன்றியமையாது வேண்டும் கோட்பாடுகளே இருக்கின்றன. மூன்றாவது நோக்கம் "இறைவனிடத்தும், நாட்டினிடத்தும், அன்புடையோராக விருத்தல்" என்பதாகும். கடவுளிடத்து அன்புடையோராயிருத்தல் இன்றியமையாத தென்பதில் ஐயமில்லை. எம்மதத்தினராயினும், எவ்வகையினராயினும், எப்பாலாராயினும் நாட்டினிடத்து அன்புடையோராயிருந்தாலன்றி நாடு முன்னேற்றமடைய முடியாதென்பது திண்ணம். அரசனிடத்தும் அன்பு வேண்டுவது தான். நாலாவது நோக்கம். "சைவ சமயத்தையும் தமிழ் மொழியையும் வளர்த்தல்" என்பதாகும். இந்நோக்கம்சைவ சமயிகளாயுள்ள அனைவராலும் ஆதரிக்கப்படத் தக்கனவாகும். எல்லாச் சமயங்களிற் உயர்ந்தது சைவ சமயம். அதனை ... முயற்சிக்க வேண்டுவது சைவ... கடமை யென்பதில் ஐயமில்லை. தமிழ் மொழி முற்காலத்தில் வழக்கினும் செயலினும் அதி உன்னத நிலையில் இருந்ததென்பதற்குப் பல சான்றுகள் உள. 'யாப்பருங்கலவிருத்தி' என்னும் புத்தகத்தைப் பார்த்தால் யாவரும் ஆச்சரியப்படுவார்கள். எளிதாகவும் தெளிவாகவும் அதில் கூறப்பட்டிருப்பவைகளைக் கண்டு எவரும் ஆச்சரியப்படாமல் இருக்க முடியாது. அதில் கூறப்பட்டிருப்பதுபோன்று ஒரு நாடு இருந்திருக்க முடியுமா என்று கூடச் சிலர் சந்தேகிக்கக்கூடும். தமிழும், ஆங்கிலமும் கற்ற பெரியோர்களில் சிலர் பேசும் பொழுது "எனக்குத் தமிழில் பேசத் தெரியாது. ஆங்கிலத்தில் பேசுகிறேன். அதற்காக மன்னியுங்கள்" என்று கூறுகின்றனர். எந்தக் காரியத்திற்கும் பணம் இன்றியமையாததாகும். நமது நாட்டில் பொதுச்சபைகளில் பணமில்லாமையினாலேயே பல வேலைகள் செய்ய முடியவில்லை. இச் சங்கத்திற்கும் மூல தனம் இல்லையென அறிகிறேன். அடுத்த ஆண்டு அறிக்கையில் மூலதனம் குறிப்பிடும் நிலையில் தனவைசியர்கள் செய்வார்களென நம்புகிறேன்.

### உடற் பயிற்சி வேண்டும்.

எந்த நாட்டில் ஆண் பெண் இருபாலாரும் ஆரோக்கியத்தோடு இருக்கிறார்களோ அந் நாடே உயர்ந்த நாடாக இருக்க முடியும். காலையில் கஸரத், உலாவுதல், பந்தடித்தல், மாலையிலும் அவ்வாறு செய்தல் அவசியமாகும். உடலில் பலம் உண்டாக, மனோபலமும், மனோபலம் உண்டாக அறிவு பலமும் உண்டாகின்றது. எனவே ஒவ்வொருவரும் உடற்பயிற்சி செய்தல் அவசியம் எனக் கூறுகிறேன்.

### பலி வேண்டாம்.

சைவ சமயம் உயர்ந்ததென்பது உண்மைதான். ஆனால் சமயத்திலுள்ள தெய்வத்தின் பேரால்பலிநிகழ்த்துதல் கொடுமையாகும். அதனை நிறுத்த இச் சங்கத்ினரும் ஏனையோரும் முயற்சித்தல் இன்றியமையாததாகும். எங்கள் ஊரில்கூட "உலகம்மன்" என்று ஒரு அம்மன் இருக்கிறது. அதற்கு ஆயிரக் கணக்காகப் பலியிடுவது உண்டு. அதனை நானும் எனது நண்பர்களும் நிறுத்த முயற்சித்த பொழுது பல இடையூறுகள் உண்டாயின. ஆயினும் இப்பொழுது நின்று விட்டது. எனவே அன்பர்கள் பலியிடும் வழக்கத்தை ஒழித்து உண்மைச் சைவ சிகாமணிகளாக இருக்குமாறு வேண்டுகிறேன். சமபந்தி போஜனம் வேண்டுமென்று தேசாபிமானிகள் சொல்லுகிறார்கள். அதற்கு மாமிச உணவு இடையூறாக இருக்கின்றது. மாமிச உணவு உண்ணுவோரோடு சைவ உணவு உட்கொள்ளுவோர் எங்ஙனம் ஒன்றாயிருந்துஉட்கொள்ளவியலும்? டாக்டர் நாயுடு தேசாபிமானி. ஆனால், "மரக்கறி போஜனம் சிறந்தது. அதனையே அனைவரும் உட்கொள்ள வேண்டும்." என்று எப்படி நான் பிரசாரம் செய்கிறேனோ, அதுபோலவே டாக்டர் நாயுடுவும் "அனைவரும் புலால் புசித்தல் வேண்டும். அதுவே உடம்பிற்குப் பலம் தருவது. அவ்வுணவினாலேதான் வீரம் உண்டாதல் ..." என்று பிரசாரம் செய்பவர். ... வருவதாக அறிந்தவுடன் வீட் ...த்துப் பாத்திரங்களை எல்லாம் சுத்தம் செய்து விடுவார். நான் இருக்கும் வரை சுத்த போஜனம் நடைபெறும். மாமிசம் உண்பவருடன் ஒன்றாயிருந்து உண்பதென்பது கஷ்டமான காரியமாகும். எனவே நகரத்தார்கள் புலால் உணவை நீக்கி விடும்படி கேட்டுக் கொள்ளுகிறேன். சிதம்பரம் சுவாமி சகஜானந்தாவை அறிவீர்கள். அன்னார் குடும்பத்தார்களனைவரும் புலால் உண்பதில்லை. சுத்தச் சைவர்கள். அன்னார் இல்லங்களில் புசிப்பதற்கு ஆட்சேபமென்ன? நானே அன்னாரை உணவு தரும்படி வலியக் கேட்டதுண்டு. மனிசனுக்கு மனிசன் வேற்றுமையில்லை. அன்பர்களே! இனி உபந்யாசகர்களின் பிரசங்கங்களைக் கேட்க வேண்டுகிறேன்.

பின்னர், மேலச் சிவபுரி ஆர். பி. அமிர்தலிங்கம் பிள்ளை அவர்களால் 'பெரிய புராணம்' என்பதுபற்றியும், டி. வி. முத்தையா செட்டியாரவர்களால் 'சமய உலகில் நமது நிலை' என்பது பற்றியும் சொற்பொழிவுகள் நிகழ்த்தப்பட்டன. டி. வி. முத்தையா செட்டியாரவர்கள் செய்த பிரசங்கத்தில் உள்ள சந்தேகங்களைப் பலர் கேட்ட பொழுது தக்கவிடைகள் அளிக்கப்பட்டன.

### முடிவுரை.

பின்னர் தலைவர்கள் முடிவுரை கூறினார்கள். அதன் சாரம் வருமாறு:—

### பிறப்பினால் உயர்வு தாழ்வில்லை.

கனவான்களே!

திருக்குறள் ஆசிரியரைக் குறை கூறினால் கூட சிலருக்குக் கோபம் வருவதில்லை. ஆனால் அதன் உரையாசிரியரைக் குறை கூறினால் கோபம் வந்து விடுவது வழக்கம். எதிலும் நன்மையும் தீமையு முண்டு. எதில் தீமையிருந்தாலும் களையவேண்டுவதுதான். பிறப்பினால் உயர்வு தாழ்வு நமது நாட்டு வழக்கமன்று. ஆரியர் நூல்கள் தமிழ் நூல்களில் கலந்த பின்னரே பிறப்பினால் உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்ற கோட்பாடுவந்தது. தமிழ் நாட்டு நூல்களில் பிறப்பினால் உயர்வு, தாழ்வு கூறப்பட வில்லை. புறநானூறு போன்ற சங்க இலக்கியங்களில் பிறப்பினால் உயர்வு, தாழ்வுகள் உண்டெனக் காணப்படவில்லை. எங்கள் சைவர்களிலே பஞ்சமா பாதகம் செய்பவர்களுண்டு. ஆனால் அவர்களை உடன் வைத்துண்ண நாங்கள் மறுப்பதில்லை. நடு நிலைமையிலுள்ள ஒருவன், பிறப்பினால் உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்று கூறமாட்டான். ஒருவன் நம்மைப் பார்த்து தாழ்ந்தவன் என்று கூறினால், அவ்வாறு கூறாதே என்று நாம் சொல்லலாம். அவன் கேட்காவிட்டால் சட்டபூர்வமாகவோ; அசட்டபூர்வமாகவோ அவன்சொல்லாதிருக்கும்படி செய்யலாம். பார்ப்பனரல்லாதாருடைய பணங்கள் பார்ப்பனர்களால் கவரப்படும்போது, அதனை ஒழிக்கச் செய்யும் முயற்சிகளுக்குக் குறுக்கே நிற்கும் எதனையும் ஒதுக்கித் தள்ளுமாறு மனம் தூண்டுகிறது. கோவில்கள் வேண்டுவது தான். ஆனால் அதில் ஆபாசங்கள் இருக்கின்றன வென்றால் அதனைச் சீர்திருத்தி விடலாம்.

### மனுஸ்மிருதி கொடுமை நிறை

சிரார்த்தம் என்ற பெயரால் ...னருக்கு அளிக்கப்படும் அரிசி, கா... லியனபிதுர்க்களுக்குப்போய்ச்சேருமென்று கூறுவது பொய்யேயாகும். அப்படி போய்ச் சேருவது உண்மையானால் பிதாக்கள் தங்கள் பிள்ளைகள் மூலம் வாங்கப் பிரியப்படுவார்களேயன்றிப் பிறர் மூலம் வாங்க பிரியப்பட மாட்டார்கள். தென்புலத்தார் என்பதற்கு ஏன்பிதுர்க்கள் என்று பொருள் கூற வேண்டும். வள்ளுவர் அவ்வாறு கூறினாரா? தென்— அழகிய, புலத்தார்— அறிஞர்கள், அதாவது ஞானிகளென்றே பொருள்படுகின்றது. தென்புலத்தார் கடன் ஆற்றவேண்டுமென்றால் ஞானிகள் விட்டுப்போன வேலைகளை முடிக்க வேண்டுமென்பதே பொருளாகும். மனுநீதிகண்ட சோழனைப் பற்றிக் கூறியபொழுது இப்பொழுதிருக்கும் மனுஸ்மிருதியை நடத்திக் காட்டியமைக்காகவே 'மனுநீதிகண்ட சோழன்' என்று பெயர் வந்ததென்ற பொருள் படும்படியே சேக்கிழார் கூறினாரென்று கூறினார்கள். அவர் அப்பொருட்படி கூறியிருப்பாராயின் அவர் மனுஸ்மிருதியைப் படிக்கவில்லை யென்றுதான் சொல்ல வேண்டும். கன்றுக்குட்டியைக் கொன்றதற்காக மனிதனைக் கொல்ல வேண்டுமென்று அதில் கூறப்படவில்லை. மனுஸ்மிருதியில் கன்றுக்குட்டியைக் கொன்றதற்கு கொன்ற மனிதனைக் கொல்ல வேண்டுமென்று சொல்லப்பட்டிருப்பதை எடுத்துக் காட்டினால் மனுஸ்மிருதியில் இதுவரையில் நாங்கள் பார்த்துள்ள கொடுமைகளோடு இதனையும் சேர்த்துச் சொல்லுகிறோம். எந்த நூலானாலும் குற்றமிருக்குமானால் அதனைத் தள்ளத் தயங்கக்கூடாது. நமக்குக் கடவுள் பகுத்தறிவைக் கொடுத்திருக்கிறார். அதனைக்கொண்டு ஆராய்வோம். மனிதனாகப் பிறந்தவன் தவறு செய்வதியற்கை. பிழையிருக்குமானால் வள்ளுவரல்ல, சிவபெருமானேயாகட்டும், யார் கூறினும் தள்ளவேண்டியதுதான். எந்த நூலையும் மனிதன் எழுதினான், அறிஞன் எழுதினான், முனிவர் எழுதினார், கடவுள் என்று சொல்லத்தக்க ஒருவர் எழுதினார் என்று தான் கூறவேண்டும். கடவுளே எழுதினார்என்று கூறப்படும் நூலிலும் பிழைகளிருக்குமானால் அதனையும் தள்ளவேண்டியதுதான். கடவுளும் மனித உருக்கொண்டு நூல் எழுதியபொழுது மனிதரைப் போல ஏன் அவரும் தவறியிருத்தல் கூடாது? பெரிய புராணத்தில் கூறப்பட்டிருக்கும் மனுஸ்மிருதி இப்பொழுது உள்ளதுதான் என்று கூறினால், சேக்கிழாருக்கும் பிராமணருக்கும் சம்பந்தமுண்டென்று கூறுவதைத் தவிர வேறென்ன சொல்வது? வேதத்தில் பிழைகளிருக்கலாம். திருத்த வேண்டுவதுதான். சைவத்திலும் அப்படியேதான். எந்நூலில் பிழைகள் காணப்படுகின்றனவோ அவைகளைச் சீர்திருத்த வேண்டுவது இன்றியமையாததாகும்.

இத்துடன் சபை இரவு ௯இ மணிக்கு இனிது நிறைவேறியது. மீண்டும் நாளை மாலை நான்கு மணிக்குக் கூடும்.

தேவகோட்டை, தை...

மீண்டும் இன்று மாலை நான்கு ம... சபை கூடியது. திரு. சிதம்பர... அவர்கள் தலைமை வகித்தார்க... ளர்களான வெ. மு. சோ... செட்டியார், ஆர். உல... பிச்சப்பா சுப்பிரமணிய... மணி. சுப்பிரமணிய... முறையே, "அன்... திருக்குறளும்" "... என்பவைகளைக் ... கிட்டனர். ... கூறின...

## உள்ளுறை.


| | | |
|---|---|---|
| ...க்கை வீரம். | ... | க, உ |
| ...ளர்கட்கு உபதேசம். | ... | உ |
| ...ஞ்சிரம தர்ம விவாதம். | ... | ௩ |
| ...ர்த்மாவின் மாண்பு. | ... | ௩, ச |
| ...மது தபால்பெட்டி. | ... | ௫ |
| ...ந்தக் பாக்கன். | ... | ,, |
| ...யலகம். | ... | ௯ |
| ...ாயகம். | ... | ,, |
| ...மிழகம். | ... | ,, |
| தேவகோட்டை மாணவர் சங்க ஆண்டு விழா. | ... | எ |
| தலையங்கம்:— | | |
| குடும்பத்தோடு கப்பல் யாத்திரை. | | அ |
| உபதலையங்கங்கள்:— | | |
| எட்வர்டு மன்னர். | ... | அ, ௯ |
| ராயல் கமிஷன். | ... | ௯ |
| தந்திச்செய்தி. | ... | ,, |
| கப்பற்செய்தி. | ... | ,, |
| உள்ளூர்ச்செய்தி. | ... | ,, |
| அடிகளின் உண்மை வாழ்வு. | ... | ௧0 |
| பலதிரட்டு. | ... | ,, |
| காலண்டர் வரவு. | ... | கக |
| ஓர் வெள்ளையர்மீது வழக்கு. | ... | ,, |


காலனென் செயும்! வினைதானென்
 செயும்! எனைநாடி வந்த
கோளென் செயும்! கொடுங்கூற்
 றென் செயும்! குமரேசரிரு
தாளும் சிலம்பும் சதங்கையும்
 தண்டையும் ஷண்முகமும்
தோளும் கடம்பும் எனக்கு முன்
 னேவந்து தோன்றிடினே.

—கந்தரலங்காரம்.


குமரன், காரைக்குடி.

பிரபவ - ௵ தை - ௴ க௬ - ௨


## குடும்பத்தோடு கப்பல் யாத்திரை.

...வகோட்டை திருவாளர் அ. வெ. ...ஜ செட்டியாரவர்கள் நேற்று ...் தமது மனைவி மக்களு ...வுக்குப் பிரயாணமாகி ... மனைவி மக்களுடன் செல்லும் வழக்கம் ...டை இன்றுதான் ...ம்புகின்றது. இவ் ...காளின் பெரும் ...களிலே கழிக் ...ர்ந்த விஷய ...னர்— கனி ...டால், பாய்க்கப்பல்களிலேறி இன்னலுறுங் காலத்தில் பெண் மக்களையுங் குழந்தைகளையும் உடனழைத்துச் செல்லல் கூடாதென்று கருதியது இயல்பேயாகும். இந்நாள் கப்பல் யாத்திரை வெகு எளிதாக அமைந்து கிடப்பதை யாவரும் அறிவர். பெண் மக்களுங் குழந்தைகளும் கப்பலேறிக் கடல் கடப்பதில் கஷ்டமொன்றுமில்லை. என்றாலும் பழய வழக்கமென்ற காரணங்கொண்டு பலர் எதிர்ப்பது இயல்பாக இருக்கின்றது. எந்தக் காரியத்தைச் சீர்திருத்த முயன்றாலும் உலகில் ஏற்பாரும் எதிர்ப்பாருமிருப்பதியல்பு. அப்படியே இவ்விஷயத்தைச் சிலர் ஆதரிக்கிறார். சிலர் எதிர்க்கிறார். சிலர் வாய்மூடி மௌனி யாவதையுங் காண்கிறோம். யார் எப்படியிருந்தாலும் இவ்விஷயமானது கவனிக்கத்தக்க பெரும் பிரச்னையாகிவிட்டதென்பதை மறுக்க முடியாது. கணவனும் மனைவியும் பிரிந்திருப்பதால் எண்ணற்ற துயரமும் ஒரோவிடத்து நெறி தவறிய தன்மையும் காணப்படுகின்றன வென்று துணிந்து கூறாமலிருக்க முடியவில்லை. வாலிப வயதுடைய நங்கையுங் காளையும் பல்லாயிரம் மயில் தூரத்தில் பிரிந்து கிடப்பது எவ்வாற்றானும் நன்மை பயவா முறையேயாகும்.

அயல்நாடு செல்லும் ஆடவர், மகளிரை அழைத்துச் செல்வதால் தீமைதான் விளையுமென்று கூறுவர் கூற்றுக்கு ஆதாரமில்லை. அன்னார் மனவூகத்தாலே கூற முன்வருகிறார். தற்போதைய பிரிந்து கிடக்கும் நிலையிலேற்படுந் துயரம்கண் முன்னே காணக்கிடக்கின்றது. இதைவிடப் பெருந் துன்பங்கள் அயல்நாடு நோக்குவதில் தோன்றுமென்பதைப் பலர் அழைத்துச் சென்ற பின்னரே நாம் அறிதல்கூடும். இப்போது திரு. தியாகராஜா தொழில் முறையில் செல்லவில்லை. இளைஞர் சங்க ஆண்டுவிழாவில் தலைமை வகிக்கவே செல்கின்றாராதலின் இதனால் என்ன நன்மை தீமையுண்டாகியிருக்கின்றன வென்பதை யறிய வகையில்லை. தொழில் செய்யும் அன்பர் சிலர் மனைவி மக்களை அழைத்துச் செல்ல முன்வருதல் வேண்டும். அப்படிச் செல்வார்களாயின் அதனால் இன்றிருக்கும் நிலையில் ஒருவிதமான தீயபலனும் ஏற்படாதென்று நமக்குத் தோன்றுகிறது. ஆண்டுள்ள அன்பரில் நல்ல ரத்தம் உடலில் ஓடப்பெறுகிற யாவரும் இத்திருத்தத்தை ஆதரிப்பார்களென்றே நாம் நம்புகிறோம். முதலாளிகளாக உள்ளவர்கட்கே இத்திருத்தம் நற்பயனளித்தல் கூடும். அதனை ஈண்டு விரித்துக்கூற விரும்பவில்லை. திறமையுள்ள முதலாளிகள் தங்கள் ஏஜெண்டுகள் மனைவியை அழைத்துச்செல்லக் கட்டாயம் அனுமதியளிப்பார்கள். இதனால் கடைக்குப் பணமிச்சங்கூட உண்டென்று கூறவும் இடமில்லாமற் போகவில்லை. எப்பொழுதும் எந்தக் காரியமும் பகிரங்கமாக நடைபெறுவதில் முதலாளிகட்கும் லாபமுண்டென்பதைச் சில முதலாளிகளேயறிந்திருக்கின்றனர். ...ஞர்கள் மட்டுந்தான் இத் திருத்...யாதரிப்பார்களென்று கருத...பதில்லை. இச் சமூகத்திலுள்ள...ரும் அழைத்துச் செல்ல ...பிரன்றுகருதவுமிடமுண்டு.

இச் செயலை ஆற்ற முன் வந்துள்ள திரு தியாகராஜாவின் துணிவையும் தியாகபுத்தியையும் பெரிதும்பாராட்டுகிறோம். தமக்குக் கிடைத்த ஒரு சந்தர்ப்பத்தை நழுவ விடாது, பலர் அஞ்சிப் பதுங்கும்படியான ஒரு பெருந் திருத்தத்தைச் செயலில் காட்ட அவர் முன் வந்தது, அயல் நாடு செல்லும் அன்பர்களும் அவர்களது மனைவி மக்களும் பாராட்டத்தக்க விஷயமாகும். திரு தியாகராஜா அவர்களது மனைவியாரின் தியாக உணர்வு பெரிதும் வியந்து போற்றத் தக்கது. உடல் வளங் குன்றி ஒருவாறு நோய் வாய்ப்பட்டிருக்கும் அம் மங்கை நல்லாள் இதுகாறும் தங்குலப் பெண்மக்கள் முன்வரத் துணியாத காரியத்தில் துணிந்து செல்கின்றார். பலமிழந்த உடலோடு சின்னஞ்சிறிய கைக்குழந்தையையும் கொண்டு செல்லும் அவரது மனப்பண்பு போற்றற்குரியது! போற்றற்குரியது!! சுமார் ஐந்து வயதுடைய அவர்களது சிறுவனும் உடன் செல்கின்றான். இக் குடும்பத்தாரது யாத்திரை சிறப்புறுக! இவர்கள் நீடூழி வாழ்க! இவ் விபக்கம் மழைகாலத்துப்பயிரென வளர்ந்தோங்குக!

## எட்வர்டு மன்னர்.

ஏழாம் எட்வர்டு மன்னரைப் பற்றி இவ்வுலகில் அறியாதவர்கள் எவரும் இருக்க நியாயமில்லை. உலகில் பெரும் பாகத்தில் தனது கொடிபறக்கும் நிலைபெய்தியுள்ள பிரிட்டிஷ் ஏகாதிபத்திய மன்னராயிருந்த இவரை உலகத்தார் எவ்வாறு அறியாமலிருக்க முடியும்? இந்தியர்கள்பற்றி நாம் ஒன்றுங் கூற வேண்டுவதின்று. ஏனெனில் இந்தியச் சக்கிரவர்த்தியாக அவர் இருந்துவந்திருக்கிறார். எனவே இந்தியர்களனைவரும் அவரை நன்கறிவார்கள். இவரை சமாதான மன்னர் எனச் சரித்திராசிரியர்கள் கூறுகின்றனர். உலக சமாதானத்திற்கு எவ்வளவுதூரம் இவர் பாடுபட்டிருக்கிறா ரென்பதை யாமறியக்கூடவில்லை.

இந்தியர்களில் சிலர் ஆங்கில அதிகாரி வருக்கமே இந்தியர்களை அமுக்கிக் கொண்டிருக்கின்றதென்றும், மன்னர்களாயிருப்போர் அவர்கள் கூற்றுக்குத்தக்கவாறு ஆடவேண்டிய நிலையிலிருக்கின்றனரென்றும், தம் இஷ்டப்படி செய்ய அவர்கட்கு எவ்வித சுதந்திரமும் இல்லையென்றும், பொதுவாக அரசர்கள் நல்லவர்களாயிருக்க அவரைச் சூழ்ந்துள்ளோரே இந்தியாவின் முன்னேற்றத்திற்குப் பெருந் தடையாயிருக்கின்றனரென்றும் கூறி வருகின்றனர். ஆனால் உண்மை அவ்வாறில்லை யென்பதும் ஆங்கில மன்னர்களுங்கூட இந்தியாவைப் பொறுத்தமட்டில் பிற்போக்கான கொள்கையுள்ளவராகவே இருக்கின்றன ரென்பதும் இப்பொழுது விளங்குகின்றது. இந்தியச் சீர்திருத்தம் சம்பந்தமாகவும் இந்தியர்கட்கு உயர் பதவிகள் வழங்குவதுபற்றியும் எட்வர்டு மன்னர் தங்கருத்துக்களை வெளியிட்டுள்ள சில கடிதங்களை நாகபுரியினின்றும் வெளிவரும் "ஹித வாதா" பத்திரிகை வெளியிட்டுள்ளது. திரு ஸின்ஹா அவர்கள் (தற்பொழுது பிரபு) முதன் முதலாக இந்திய அரசாங்க நிர்வாக சபை யங்கத்தவராக நியமிக்கப்படுங் காலத்து எட்வர்ட் மன்னர் அந் நியமனத்தைப் பலமாக எதிர்த்திருக்கிறதாகத் தெரிகிறது. ஓர் கடிதத்தில்,

"மார்லிபிரபுவும் இந்திய பிரதிநிதியும் சின்னவை செய்ததினால் எனக்கு வேறு வ...யில்லை. அதனால் நான் அவ...் இராஜப்பிரதிநிதியின் சபைக்கு நி...மனம்செய்யுமாறு ஒப்புக்கொண்டேன். ஆயினும் அவர் திறமையாகவும் உ...மையாகவும் உழைப்பாரென்று மட்...் நம்புகிறேன்."

என்று குறிப்பிடுகின்றார்.

ஆங்கிலப்பாராளுமன்ற மந்திரி...ன சபைக்கு அம்மன்னர் எழுதிய குறிப்பொன்றில்,

"இராஜப் பிரதிநிதியின் சபைக்கு ஒரு இந்தியரை நியமனம் செய்வதால் இந்தியாவைப்பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கீழ் வைத்துப் பரிபாலனம் செய்வதற்கே மிகுந்த ஆபத்து ஏற்படக்கூடும். பிரிட்டிஷ் அரசாங்கத்தார் இந் நியமன விஷயத்தில் ஒரே விதமான அபிப்பிராயங் கொண்டிருப்பதால், அதனை ஏற்பதைத் தவிர வேறுவழி எனக்கில்லாததால், எனது விருப்பத்திற்குமாறாக இந் நியமனத்தை நான் ஒப்புக்கொண்டேன். எனினும் இப்புதிய முறையை நான் பலமாக ஆட்சேபிக்கிறேன் என்பதைத் தெரிவிக்கிறேன். அதனால் இந் அரசாங்கத்திற்கு எவ்வித கஷ்டங்களும் நேரிதவாறு கடவுள் காப்பாராக! அதற்குமேல் நான் ஒன்றுங் கூறமுடியாது"

என்று கூறியிருக்கின்றார்.

மார்லி பிரபு திருசின்ஹா அவர்களின் நியமன சம்பந்தமாக எட்வர்டு அரசருக்குச் சமாதானங் கூறுகையில்,

"விக்டோரியா மகாராணியின் வாக்குறுதியை நிறைவேற்றி வைத்திருப்பது தங்களை இந்தியர்களது அன்பிற்கும் மரியாதைக்கும் பாத்திரமாகுமாறு செய்யும்"

என்று தெரிவித்திருக்கிறார். எட்வர்டு அரசர் இதற்குப் பதில்விடுக்கையில்,

"விக்டோரியா மகாராணியின் பெயரை ஏன் குறிப்பிடவேண்டுமென்றுவது இவ்விஷயத்திற்கும் அவருக்கும் என்ன சம்பந்தமென்றுவது எனக்குத் தெரியவில்லை. அவரும் இத்தகைய நியமனத்தை ஏற்றுக்கொள்ளுவார் என எனக்குத் தோன்றவில்லை. இந்நியமனத்தை மிகுந்த ஆட்சேபத்துடன் கைச்சாத்திட வேண்டியிருக்கின்றது"

எனப் பதிலிறுத்தார்.

இக்கடிதங்களினின்றும் நாம் அறிவதென்ன? பிரிட்டிஷ் மன்னர்களுங்கூட இந்தியர்களது முற்போக்கிலும் இந்திய நாட்டிற்குச் சீர்திருத்தங்கள் வழங்குவதிலும் எத்தகைய மனப்பான்மை கொண்டுள்ளாரென்பதை இக்கடிதங்கள் இனிது விளக்குகின்றன. பிரிட்டிஷ் அரசாங்கத்தார் தாமாக வலிய இந்தியாவிற்குத் தன்னாட்சிமுறை வழங்கி விடுவார்களெனவும், இந்தியர்களை தன்னாட்சிமுறையில் ஆங்கிலேயர்கள் பழக்கிக் கொண்டிருக்கின்றனரென்றும் நம்பிக்கொண்டிருக்கும் இந்திய ராஜபக்தர்களையுங்கூட இக்கடிதங்கள் அவர்களது ராஜபக்தியை இழக்குமாறு செய்துவிடுமெனத் தோன்றுகிறது.

தற்பொழுது நம்மை யாண்டுவரும் ஜியார்ஜ் மன்னருங்கூட எட்வர்டு மன்னரது கொள்கையினையே அங்கீகரித்திருப்பதாகத் தெரிகிறது. அதனை எட்வர்டு அரசரே மின்டோ பிரபுவுக்கு எழுதிய கடிதமொன்றில் ஒப்புக் கொண்டிருக்கின்றார். "சமீபத்தில் இந்தியா சென்று திரும்பிவந்த எனது குமாரரும் இதை முற்றிலும் (சின்ஹா நியமன ஆட்சேபத்தை, ப-ர்) ஒப்புக்கொள்ளுகிறார்" என்பது எட்வர்ட் அரசரது மொழிகளாகும். எனவே இங்கிலாந்தின் நலத்திலும் முற்போக்கிலும் நாட்டமுள்ள எவ்வாங்கிலேயரும், ...வர் யாவராயிருப்பினும், இந்தியர் முன்னேற்றத்திலும் இந்தியர் ...திக உரிமைகள் வழங்குவதி...ப்பமுள்ளவர்களாகவிருக்க...ம ...ார்களென்பது தெற்றென விளங்குகின்றது. இத்தகைய நிலையில் பிரஸ்தாப மன்னர்களிடம் இராஜபக்தி கொண்டிருக்குமாறு பால்மணமமாறு இந்தியப் பாலர்களுக்கு இராஜபக்திப் பாடல்கள் போதித்து அவர்களைப் பாடும்படி செய்வது வெறும் வேடிக்கையே யன்றோ? இத்தகைய போக்குள்ளவர்களிடம் இந்தியர்கள் எவ்வாறு உண்மை ராஜபக்தி கொண்டிருக்க முடியும்?



## ராயல் கமிஷன்.

இந்தியாவிற்கு அடுத்த படியாக அரசியல் சீர்திருத்தம் வழங்குவதுபற்றி விசாரணை செய்து அறிவிக்கும்பொருட்டு நியமனம் செய்யப்பட்டுள்ள ராயல் கமிஷன் அங்கத்தவர்களும் தலைவரும் இங்கிலாந்திலினின்றும் இந்தியாவிற்குப் புறப்பட்டுவிட்டனர். பிப்ரவரி ௴ ௩௳ பம்பாய் துறைமுகம் வந்துசேருவார்கள். ஆனால் இந்தியாவில் அவர்கள் இந்தியப் பொதுமக்களால் எங்ஙனம் வரவேற்கப்படுவார்களென்பதை நாம் கூறத்தேவையில்லை. இந்திய காங்கிரஸ் மகாசபை, மிதவாதிகள் சபை, முஸ்லீம் சபை முதலியன அக்கமிஷனைப் பகிஷ்கரிக்க வேண்டும் எனத் தீர்மானித்திருக்கின்றன. ஓர் மாகாண சட்ட சபையிலுங்கூட கமிஷனைப் பகிஷ்கரிக்க வேண்டுமென்ற தீர்மானம் நிறைவேறி யிருப்பதாகத் தெரிகிறது. பொதுவாக இந்தியாவில் உள்ள பலதிறப்பட்ட அரசியல் கட்சிகளும் அக் கமிஷனுடன் ஒத்துழைப்பதில்லையெனவே தீர்மானித்திருக்கின்றனவென்று கூறலாம்.

அண்மையில் காசி நகரில் சர்வகக்ஷி மகாநாடு ஒன்று கூட்டப்பெற்று பகிஷ்கார நடவடிக்கைகளுக்கு வேலை செய்யத் திட்டங்கள் தயாரிக்கப் பெற்றிருக்கின்றன. நம் மாகாணத்திலுள்ள தென்னிந்திய நல உரிமைச் சங்கத்தார் ராயல் கமிஷன் விஷயத்தில் எவ்வாறு நடந்துகொள்ளுவதென்று இதுவரை முடிவு செய்யாதிருந்தனர். அவர்களும் இப்பொழுது ஓர் முடிவுக்கு வந்துவிட்டனர். இரண்டொரு தினங்கள் முன் சென்னையில் நடைபெற்ற தென்னிந்திய நல உரிமைச் சங்கக் கூட்டத்தில் கீழ்க் காணும் தீர்மானம் நிறைவேறியிருக்கின்றது. அத் தீர்மானத்தினைத் திராவிடன் பத்திரிகையினின்றும் எடுத்துப் பிரசுரிக்கின்றோம்:—

"ராயல் கமிஷன் நியமன அறிக்கையில் சட்டசபைக் கமிட்டிகளின் அந்தஸ்தும், அவற்றின் வேலைகளும் தெளிவாய் விவரிக்கப்படவில்லை என்று தென் இந்திய நலவுரிமைச் சங்க நிர்வாக கமிட்டியும் சட்டசபைக் கட்சியாரும் கருதுகின்றனர்; அதுவுமின்றி அந்த சட்டசபைக் கமிட்டிகள் விசாரணையின் முக்கியமான சந்தர்ப்பங்களிலெல்லாம் கமிஷன்முடிவுகளை உருவகப்படுத்தத் தக்கதாக அந்தக் கமிட்டிகளுக்குத் திருப்திகரமான அதிகாரமும் அந்தஸ்தும் கொடுக்கப்பட்டிருப்பதாய் (சர்க்கார்) உத்தியோக முறையில் அறிவிக்கும் வரையில் தென் இந்திய நலவுரிமைச் சங்கத்தாரும் சட்டசபைக் கட்சியும் ராயல் கமிஷனுடன் ஒத்துழைக்க முடியாது."

இத்தீர்மானத்தின் கோரிக்கைக்கு அரசாங்கத்தார் இணங்குவார்களென்று நாம் நம்பக் காரணமில்லை. எனவே தென்னிந்திய நல உரிமைச் சங்கத்தாரும் அக் கமிஷனுடன் ஒத்துழைக்க முடியாதென்றே எண்ணுகிறோம்.

எவர் பகிஷ்கரிப்பினும், கமிஷனை வரவேற்றுபசரித்து வேண்டுவன செய்யவும் அவர்கள் முன்சாட்சியங் கொடுக்கவும் ஓர் கூட்டம் விரைவினில் தயாரிக்கப்பட்டு விடுமென்பதில் ஐயமில்லை. கமிஷன் அங்கத்தவர்களும் இங்கு வந்து ஏதோ விசாரணை செய்ததாகச் சொல்லிக்கொண்டு திரும்பப் போகின்றனர். இத்தகைய கமிஷன்களால் இந்திய நாட்டிற்கு எத்தகைய நன்மையும் விளையப்போவதில்லையென்பதே நமது திடமான அபிப்பிராயம். இதனை முன்னரும் பன்முறை வலியுறுத்தி வந்திருக்கின்றோம். இவற்றால் இந்தியாவிற்குப் பணச் செலவு அதிகமாக ஏற்படும். அவ்வளவே நாமடையக் கூடிய பயன். நமது உரிமைகளுக்காக நாம் பாடுபட்டால் மட்டும் நன்மை கிட்டுமேயன்றி ராயல் கமிஷன்கள் வருவதாலும் போவதாலும் ஏதும் ஏற்படப் போவதில்லை. இந்தியர்களுள் ஒரு சில தனி நபர்களுக்குப் பதவிகளும் பட்டங்களும் கிடைக்கலாம். அதனால் பொது ஜனங்களுக்கு எள்ளளவேனும் பயனுண்டா?

## தந்திச் செய்தி

பினாங்கு தை-௴ கஉ௳

தந்தி வரவில்லை.

### மகாநாடு.

இரங்கூன் தை௴ க0௳

பர்மா தனவணிக வாலிபர் மாகாநாடு நாளிது தைத்திங்கள் உ௩, உச தேதிகளில் இரங்கூன் சிதம்பர செட்டியார் கல்விச் சாலையில் நடைபெறும். பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் சங்கக் காரியதரிசியான திருவாளர் சா. அ. ச. ராமன் செட்டியாரவர்கள் வரவேற்புக் கழகத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார். மகாநாட்டு வேலைகள் தீவிரமாக நடைபெற்று வருகின்றன. ஜனங்கள் அதிக ஊக்கம் காட்டுகின்றனர். மகாநாட்டுத் தலைவர் திருவாளர் அ. வெ. தியாகராஜா அவர்கள் தமது மனைவியோடு வருகின்றார்கள். அவர்கள் தங்குவதற்கு ராஜா ராமனுத ரெட்டியாரவர்களது பங்களா ஏற்பாடு செய்யப்பெற்றிருக்கிறது. மகாநாட்டன்று திருவிளையாடல் புராணத்திலிருந்து ஓர் வழக்கு விசாரணையை நாடகரூபமாக நடித்துக் காட்ட இளைஞர்கள் ஏற்பாடு செய்து வருகின்றனர்.

இரங்கூன் தை-௴ க0௳

| | |
|---|---|
| தவணை வட்டி | 0-க௩-0 |
| பழய பவுன் | க௩-௯-௩ |
| புதிய பவுன் | க௩-எ-0 |
| படகு நெல் | கஅ0-0-0 |
| ரயில நெல் | க௭௫-0-0 |
| ஸ்பெஷல் அரிசி | ச௩-0-0-0 |
| மில்சார் அரிசி | ௫0௫, ௫உ-0-0-0 |
| நசேன் அரிசி | ச௫0-0-0 |
| சிறிய மில் அரிசி | ச௫0-0-0 |
| பெரிய மில் அரிசி | ச௩௫-0-0 |
| ஏ ஒன் குருணை | ச௨-0-0-0 |
| தட்டைப்பயறு | ச00-0-0 |
| உளுந்து | ச௯-0-0-0 |
| சிவப்பு பீன்ஸ் | உச௫-0-0 |
| வெள்ளை பீன்ஸ் | உ௫0-0-0 |
| மிளகாய் | ௯-0-0-0 |
| பருத்திவிதை | ௯-அ-0 |
| வெங்காயம் | உ-அ-0-0 |

## கப்பற் செய்தி.

'எரின்புரா'க் கப்பல் நாளிதுதைத் திங்கள் க௯-ம் நாள் வெள்ளிக் கிழமை சென்னையிலிருந்து இரங்கூனுக்குப் புறப்படுகிறது.

'ரோஸ்னா'க் கப்பல் நாளிது தைத் திங்கள் க௯-ம் நாள் நாகப்பட்டினத்திலிருந்து மலாய் நாட்டிற்குப் புறப்படுகிறது.

## உள்ளூர்ச் செய்தி

| | |
|---|---|
| சென்னை உண்டியல் வட்டம். | ... |
| இரங்கூன் உண்டியல் வட்டம். | ... |
| சென்னை நடப்பு வட்டி, மார்கழி | 0-க... |
| பவுன். | க௩-௯-௯ |
| வெள்ளி ரூபாய் எடை. | 0-௯-௯ |

**மாற்றப்பட்டார்:**— காரைக்குடி முதலாவது சர்க்கிள் இன்கம்டாக்ஸ் ஆபீஸராகவிருந்த திருவாளர் எஸ். லட்சுமண சாஸ்திரியாரவர்கள் இன்கம் டாக்ஸ் கமிஷனருக்கு உதவி உத்தியோகஸ்தராக நியமிக்கப்பட்டிருக்கிறார். இவரது ஸ்தானத்திற்கு நாகபட்டணம் இன்கம்டாக்ஸ் ஆபீஸராக இருந்தவரும் திருவாளர் டி. ஆறுமுக முதலியார் நியமிக்கப்பட்டுள்ளார். அவர் பிப்ரவரி மாதம் உ௰ம் நாள் காரைக்குடியில் வேலை ஒப்புக்கொள்ளுவார்.

**இந்து மதாபிமான சங்கம்:**— இச் சங்கத்தின் கூட்டம் இம்மாதம் ௯-ம் நாள் இரவு ௯-மணிக்கு தமிழ் பண்டிதர் திருவாளர் மாசிலாமணி தேசிகர் அவர்கள் தலைமையில் கூடிற்று. அச் சமயம் திருவாளர்களான காத்தமுத்துப்பிள்ளை, ஜயராமய்யர், வெ. இராமநாதன் செட்டியார், கதி. முத்தரசப்ப செட்டியார் என்போர்கள் முறையே, கடவுள், சீர்திருத்தம், பெண் கல்வி, பிறனில் விழையாமை என்னும் பொருள்கள் பற்றிப் பேசினார்கள் என்று அறிவிக்கப்படுகிறது.

**நலஉரிமைத் தொண்டர் சங்கம்:**— இச்சங்கத்தின் பொதுக்கூட்டமொன்று நாளிது தைத்திங்கள் ௫-ம் நாள் வெள்ளிக்கிழமை யன்று மாலை திரு. பிச்சப்பா சுப்பிரமணியன் அவர்களது தலைமையின் கீழ் நடைபெற்றது. அது காலை திருவாளர்களான கே. சுப்பிரமணிய பிள்ளை, தி. ம. நடராஜன், மெய்யப்பன், ராமசாமி ஆதியோர் முறையே, 'தமிழும் தமிழர் நிலையும்' 'தெய்வீக உரிமை,' 'ஜீவகாருண்யம்,' 'இல்லறம்' எனும் விஷயங்கள் பற்றி அரிய சொற்பெருக்குகள் நிகழ்த்தினர். தலைவரவர்கள் தக்கவாறு முடிவுரை கூறியதும் வந்தன வாழ்த்துடன் கூட்டங் கலைந்தது.

**யூனியன் போர்டு சபை:**— இவ்வூர் யூனியன் போர்டு சபையின் கூட்டமொன்று திருவாளர் முரு. வீர. சாமிநாதன் செட்டியாரவர்கள் தலைமையில் நாளிது ஜனவரி மாதம் க௯-ம் நாள் நடைபெற்றது. ஆறு அங்கத்தவர்கள் மட்டுமே விஜயம் செய்திருந்தனர். பல முக்கியமான விஷயங்கள் ஆலோசனைசெய்து முடிவு செய்யப்பட்டன. க௯உஎ—உஅ-ம் வருஷத்திற்குத் தயாரிக்கப்பெற்ற ரிவைஸ்ட் பட்ஜெட்டும், க௯உஅ—உ௯-ம் வருஷத்திற்குத் தயாரிக்கப்பெற்றுள்ள பட்ஜெட் திட்டமும் அனுமதிக்கப்பெற்றன. தமாஷாக்களின் மீது வரி விதிப்பதுபற்றி ஜில்லா போர்டு தலைவரிடமிருந்து வந்துள்ள கடிதம் படிக்கப்பெற்று, அவ்வரி விதிக்க இச்சபை யாருக்குச் சம்மதமென்று தீர்மானிக்கப்பெற்றது. இந்த ஊர் ஜல சப்ளை சம்பந்தமான பரிசீலனை வேலையைத்துரிதமாக நடத்துமாறு அரசாங்கத்தாரைக் கேட்டுக்கொள்ளுவ... ஓர் தீர்மானம்நிறைவேற்றப்பட்...ருக்கிறது. சுகாதார வாரக் கொண்...் விஷயமாக இவ்வூரில் பொதுக்கூட்டம் ஒன்று கூட்டி அக்கூட்...தில் நியமிக்கப்பெறும் கமிட்டி...ன் மூலமாக வேண்டிய ஏற்பாடுகள் ...சபைத் தலைவர் செய்யுமா...ற்றொரு தீர்மானமும் நிறைவே...து.

**சுகாதார சங்கம்:**— இச்சங்கக் கூட்டம் இம்மதி அ-ம் நாள் ...பதாபிமான சங்கக் கட்டிடத்தில் உபதலைவர் டாக்டர் டி. ஆர். என். தாஸ் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. அத் தருணம் கீழ்க்காணும் தீர்மானங்கள் நிறைவேறின:—

க. சுகாதாரக் குழந்தைகள் வா... கொண்டாட்ட நிர்வாக சபையில் இ... ...ப் பிரதிநிதிகளாக திருவாள் ...மரு. லெ. நா. நடேசன் செ... ...ராமநாதன் செட்டியார், ...கிருஷ்ணமாச்சாரியார், கி. ... மெய்யப்பனம்பலம், அ. ...ம்பலம் ஆகியவர்களை நியமிக்கின்றது.

உ. திரு. ... ...நாதன் செட்டியாரவர்கள் ... செல்வதை முன்னிட்டு ...ப்பெற்ற ராஜிநாமாவை ஒப்புக்கொண்டு அந்த ஸ்தானத்தில் திருவாளர் அழ. ராம. அழகப்ப செட்டியாரவர்களை அங்கத்தினராக நியமிக்கின்றது.

௩. இவ்வூர் வெற்றிவிநாயகர் நாடகக் கொட்டகையில் நாடகம் நடைபெறும் நாட்களில் ஷை கொட்டகைப் பக்கத்திலுள்ள இடங்களிலும், வீதியிலும் மலஜலம்விடுத்து அசுத்தப்படுத்தாதிருக்க, நாடகம் நடக்கும் நாட்களில் யூனியன் போர்டார் தகுந்த ஏற்பாடு செய்துகொள்ள இச்சங்கம் கேட்டுக்கொள்ளுகிறது.

ச. காப்பி கிளப்புகளில் பலகாரங்கள் மீது தூசி படியாதபடி தடுக்க அவற்றைக் கண்ணாடி பீரோவுக்குள் வைக்க ஏற்பாடு செய்வதுடன், பலகாரச் சாப்பாட்டுக் கடைகள் சுகாதார முறைப்படி இராததால் அவற்றை ஒழுங்குபெறச் செய்ய வேண்டும் முயற்சிகள் எடுத்துக்கொள்ள இக் கூட்டம் யூனியன் போர்டாரைக் கேட்டுக் கொள்ளுகிறது, என சங்க விளம்பர சபை உத்தியோகஸ்தர் அறிவிக்கிறார்.

### ஆவினிப்பட்டி.

**விவேகானந்தர் கல்விக்கழகம்:**— இக் கழகத்தின் முதலாவதாண்டு நிறைவு விழா இத்திங்கள் பதிமூலாம் நாள் மாலை மூன்று மணிக்கு நடைபெறும். அவ்வமயம் கிழச் சிவற்பட்டி திருவாளர் அ. வேணுகோபால நாயுடு அவர்கள் L M P. தலைமை வகிப்பார்கள் என்று கழகத்தார் அறிவிக்கின்றனர்.

### கூட்டத்தில் செருப்பு.

சென்ற ஞாயிற்றுகிழமை யன்று மாலை சென்னைக் கடற்கரையில் ராயல் கமிஷன் பகிஷ்காரக் கூட்டம் நடைபெற்ற அதே சமயத்தில் ௬00 கஜ தூரத்திற்கு அப்பால் 'ஜனங்களின் கட்சியின்' ஆதரவில் கமிஷனை வரவேற்று நமது கோரிக்கையை அவர்கள் முன் தெரிவித்துக் கொள்ள வேண்டுமென்ற போட்டிக் கூட்டம் ஒன்று நடந்தது. ஒத்துழையாமையால் ஒரு ந...மும் விளையாதென்று ஸ்ரீ பருக்கி, பிரகா...ராவ், போக்கர் முதலியோர் பேசினர்... கூட்டத்திற்கு ௬00 பேர் வந்திருந்த... பெரிய கூட்டத்திலிருந்து வேடிக்... பார்க்கவென்று பலரும் ...டி ... போய்க் கொண்டிருந்... ...தியில் கூ... குரலும் குழப்பமும் ... கூட்டத்...திலி... ...ருவர் தமது ... ...களை ...யு ...த்தலைவர்கள் ... ...டையில் ...பெறிந்தார். எவரு... ...ில்லை. ... ...செருப்புக்க... ...கூறி ...க்கு விற்றார். ... ...மகாத்மா காந்தி... அனு... ...தெரிவித்து... கூட்... ...க் கலைத்துவிட்டா... ...செ... கிழமை வெளி... ...தமிழ்நாடு ...தை யில் ஓர் செய்தி காணப்படுகிறது.

# அடிகளின் உண்மை வாழ்வு.

பகுதி ச.

அத்தியாயம் ௩௹.

இதுவரை என் மனதுக்குப் படாத ஓர் பிரச்னையை டால்ஸ்டாய் பண்ணையில் தான் மிஸ்டர் காலன்பாக் எனது கவனத்திற்குக் கொண்டுவந்தார். நான் முன்னர் கூறியிருப்பதுபோல் பண்ணையிலுள்ள சில பையன்கள் மிகக் கெட்டவர்களாகவும் அடங்காதவர்களாகவுமிருந்தனர். அவர்களுள் இழிகுணம் படைத்தவர்களுங்கூடச் சிலர் இருந்தனர். இவர்களோடு எனது மூன்று குமாரர்களும் அவர்களை யொத்த ஏனைய பிள்ளைகளும் தினமும் நெருங்கிப் பழக நேர்ந்தது. இவ்விஷயம் மிஸ்டர் காலன் பாக் அவர்களின் மனத்தைப் பெரிதும் துன்புறுத்தியது. எனினும் எனது குமாரர்களை அந்த அடங்காப் பிடாரிகளோடு வைத்திருக்கும் விஷயத்திலேயே அவரது கவனம் முழுதும் சென்றுகொண்டிருந்தது.

ஓர் நாள் அவர் பின் வருமாறு கூறினார்:- "உங்களது குமாரர்களைக் கெட்ட பையன்களோடு கலந்து கொள்ளுமாறு நீங்கள் செய்யும் வழக்கம் எனக்குப் பிடிக்கவில்லை. அதனால் ஏற்படக்கூடிய பலன் ஒன்றுதான். அதாவது இக்கெட்டவர்கள் கூட்டுறவால் அவர்களும் கெட்டுவிடுவார்கள் என்பதேயாம்"

இவ்விஷயம் அக்காலத்தில் என் மனத்தினைக் குழப்பிற்று என்பது எனக்கு இப்பொழுது ஞாபகத்திலில்லை. எனினும் நான் அவருக்கு அப்பொழுது அளித்தவிடை ஞாபகமிருக்கிறது. அது வருமாறு:—

"எனது பையன்களையும் இழிகுணம் படைத்தவர்களையும் நான் வெவ்வேறாக எங்ஙனம் கண்டு கொள்ளமுடியும்? அவவிருதிறத்தாருக்கும் நான் பொறுப்பாளியாகவே இருந்து வருகிறேன். நான் அழைத்ததை முன்னிட்டே இச் சிறுவர்களெல்லாம் இங்கு வந்திருக்கின்றனர். சிறிது பொருளைக் கொடுத்து அவர்களை நான் விலக்கி விடுவதானால் அவர்கள் உடனே ஜோஹானஸ் பர்க்கிற்கு ஓடித் தங்களது பழையகெட்டவழிகளில் நுழைந்துவிடுவார்கள். உண்மையைக் கூறுமிடத்து அவர்கள் இங்கு வந்திருப்பதால் நான் தங்களுக்குப் பெரிதும் கடமைப்பட்டிருப்பதாக அவர்களும் அவர்களது பெரியோர்களும் எண்ணிக் கொண்டிருக்கின்றனர் என்றே சொல்லவேண்டும். அவர்கள் இங்கு பலவித இடையூறுகளுக்கிடையே இருந்து வருகின்றனர் என்பது உங்களுக்கும் எனக்கும் நன்கு தெரியும். அவர்கள் இங்கு இருக்க ...ண்டுவதுதான். எனவே எனது பிள்ளை... அவர்களோடு கலந்து பழக வேண்டுவதும் அவசியந்தான். எனது பிள்ளைகள் மற்றவர்களைக்காட்டிலும் மேம்பட்டவர்கள் என ...ர்கள் எண்ணிக்கொள்ளக்கூடியவாறு ...ன் பிள்ளைகளுக்குப் போதிக்க வேண்டுமெ... நீங்கள் நிச்சயமாக விரும்ப மாட்டீர்கள். ...கள் மேலானவர்களென அவர்கள் எண்ணு...று செய்வது அவர்களைக் கெடுப்பதாகும். மற்றப்பையன்களோடு நெருங்கிப் பழகுவது அவர்கள் நல்லொழுக்கையும் கட்டுப்பாட்டையும் கற்பதாகும். அவர்களும் நன்மை தீமைகளைப் பாகுபாடுசெய்து அறிந்துகொள்ளும் தன்மையைத் தாங்களாகவே பெறுவார்கள். எனது பிள்ளைகளிடம் உண்மையில் ஏதாவது நல்ல குணங்கள் இருக்குமாயின் அவை மற்றப் பிள்ளைகளையும் நல்ல நிலைமைக்கு மாற்றிவிடும் என நாம் ஏன் நம்பலாகாது? அது எப்படியிருந்தபோதிலும் அவர்களை இங்கு வைத்துக் கொள்ளாமலிருக்க முடி... அவ்வாறு செய்வதால் ஏதாவது கஷ்டமேற்படுவதாயிருப்பின் அதற்கு நாம் தயாராகத்தானிருக்க வேண்டும்".

இவ்வார்த்தைகளைக் கேட்டதும் மிஸ்டர் காலன்பாக் தனது தலையை யசைத்தார்.

இதன் பயனாகக் கெடுதலெதுவும் ஏற்பட்டுவிட்டதெனச் சொல்ல முடியாதென்று கருதுகிறேன். எனது பிள்ளைகள் இதனால் எவ்வகையிலேனும் கெட்டுவிட்டார்களென்று நான் எண்ணவில்லை. உண்மையில் அவர்கள் சிறிது நலம்பெற்றிருக்கின்றனரென்பதை நான் நன்கு காண்கின்றேன். தாங்கள் மேலானவர்கள் என்ற எண்ணம் அற்பமேனும் அவர்களிடம் இருந்திருப்பின் அக்குணம் எல்லாவிதமான பிள்ளைகளோடும் கலந்து பழகியதால் அவர்களிடமிருந்து அகன்றுவிட்டதென்றே சொல்லவேண்டும். அவர்கள் நல்ல ஒழுக்குள்ளவர்களாக்கப்பட்டனர்.

நல்ல பிள்ளைகள் கெட்ட பிள்ளைகளோடு கலந்து கற்பிக்கப்படுவதாலும், அவர்கள் கெட்டபிள்ளைகளோடு தாராளமாக நெருங்கிப் பழகும்படி விடுவதாலும் எவ்வித தீமையும் அவர்கட்கு நேர்ந்துவிடுவதில்லை யென்பதை இதிலிருந்தும் இது போன்ற ஏனைய சோதனைகளிலிருந்தும் நான் நன்கு கண்டுகொண்டேன். ஆனால் இத்தகைய சோதனைகள் நடத்துகையில் பிள்ளைகளின் பெற்றோர்களும் பெரியோர்களும் வெகு கவனமாக இருந்தால்மட்டுமே எவ்வித தீங்கும் நேராமலிருக்கும்.

கம்பளத்தால் நன்கு போர்த்தப்பட்ட குழந்தைகளெல்லாம் எவ்வித தீங்கும் நேராமலிருப்பார்களென்ற உறுதியில்லை. எனினும் எல்லாவிதமான பெண்களும் பிள்ளைகளும் ஒன்றாக வைக்கப்பட்டுப் போதிக்கப்படுவது பெற்றோர்களுக்கும் உபாத்தியாயர்களுக்கும் கடுமையான சோதனையாயிருக்குமென்பது உண்மையே. அவர்கள் எப்பொழுதும் கவனமாக இருந்து வர வேண்டும்.

---



# பல திரட்டு.

## பொதுக்கூட்டம்.

ஊனையூரில் ஜனவரி கசுஉ மாலை ௬இ மணிக்கு ஸ்ரீமாந் நா. மு. சுப்பையா பிள்ளையவர்கள் தலைமையில் ஒரு பொதுக்கூட்டம் கூடியது. ஏராளமான ஜனங்கள் கூடியிருந்தார்கள். துங்கன் சொக்கனுண்டித் தேவர் அவர்கள் காணுகொத்தான் திருவானர் வைசு ஷண்முகம் செட்டியார் அவர்களால் அறிமுகம் செய்யப்பட்டதும் தேசிய கீதம் பாடப்பெற்று, ஸ்ரீமாங்கள் மு. ஆதிரெத்தினம் பிள்ளை, கு. குப்பமுத்துப் பிள்ளை, வீர. சுப்பையா பிள்ளை முதலியோரால் பல விரிவுரைகள் நிகழ்த்தப்பட்டு முடிவில் கர்ப்பக நாட்டுத்தலைவர் திரு துங்கன் சொக்கனுண்டித் தேவரால் "பார்ப்பனரல்லாதார் பத்திரிகையும் பார்ப்பனப் பத்திரிகையும்" என்பதுபற்றி எளிய நடையில் மிகச் சிறப்புடன் பேசப்பெற்று தீர்மானங்களை ஏகமனதுடன் நிறைவேற்றிக் கூட்டம் கலைந்தது, என ஒரு அன்பர் அறிவிக்கிறார்.

ஃ ஃ

## புலால் புசிப்பதில்லை.

மல்யுத்தத்தில் அகில உலகத்திலும் புகழ் பெற்ற ஸிபிஸ்கோ என்பவர் இப்பொழுது இந்தியாவிற்கு வந்திருக்கிறார். இவர் மற்போரைத் தொழிலாகக் கொண்டவர். கடந்த ௨0 ஆண்டுகளாக உலக மெங்கும் சுற்றிப் பலரை வென்று பல பதக்கங்களும் பரிசுகளும் பெற்றிருக்கிறார். அவரதுஉயரம் ௬ அடி கூ அங்குலம். பரந்த மார்புள்ளவர். ககூஉ-ம் ஆண்டில் பாஞ்சால நாட்டைச் சேர்ந்த பிரபல குஸ்திக்காரரான காமா என்பவர் இங்கிலாந்து சென்றிருக்கையில் ஸிபிஸ்கோவுக்கும் அவருக்கும் குஸ்தி நடந்தது. மூன்று மணி க௯ நிமிஷங்கள் வரை இருவரும் குஸ்தி செய்தும் ஒருவரை யொருவர் தோற்கடிக்க முடியவில்லை. இப்பொழுது காமாவைத் தோற்கடித்து அகில உலகத்திலும் குஸ்திச் சண்டையில் தானே சிறந்தவரென்ற புகழ்பெற வேண்டுமென்ற நோக்கத்துடனேயே தான் இந்தியா வந்திருப்பதாகவும், இத்தடவை அவரைத்தான் ஜெயித்து விட முடியுமென்று நம்புவதாகவும் ஸிபிஸ்கோ கூறுகிறார். தான் புலாலுணவு புசிப்பதில்லை யென்றும், சுருட்டு, புகையிலை, மதுவகைகள் முதலிய லாகிரி வஸ்துக்கள் உபயோகிப்பதில்லை யென்றும், மரக்கறி உணவே கொள்ளுவதாகவும், ஒழுங்கான வாழ்க்கை வாழ்ந்து வருவதாகவும், திறந்த வெளிகளிலேயே பெரிதும் வசிப்பதாகவும் தெரிவிக்கிறார்.

ஃ ஃ

## செவிட்டுக்கு சத்திர சிகிச்சை.

ஜபல்பூரில் இராணுவ வைத்திய சாலையில் டாக்டராக விருந்த டாக்டர் வின்ஸெண்ட் நெஸ்டலேட் என்பார் சில ஆண்டுகளுக்கு முன்னர் சுமார் ௬ வயதுள்ள ஓர் சீக்கியருக்குச் சத்திர சிகிச்சை செய்து அவன் கண்ணைக் குணப்படுத்தினார். அவனுக்குப் பூரண பார்வை கிட்டியது. அவனுக்குக் காதும் செவிடாயிருந்தது. அந்த டாக்டர்மீது அவனுக்கு அளவுகடந்த நம்பிக்கையிருந்ததால் வைத்திய சாலையிலுள்ள சத்திரம் செய்யும் மேஜையின்மீது படுத்துக்கொண்டு தனக்குச் சத்திரம் செய்து தனது செவிட்டு நோயைக் குணப்படுத்த வேண்டுமென்றும், இல்லையேல் தான் எவ்வித உணவும் கொள்ளப்போவதில்லை யென்றும் கூறினான். மிகுந்தகட்டாயத்தின்மேல் அவர் அவனுக்குச் சத்திரம் செய்து ஏதோ சிகிச்சை செய்தார். அதனால் அவனுக்கு மிகுந்த நன்மையேற்பட்டது. இன்னும் பலருக்கு இதே மாதிரியாகச் சத்திர சிகிச்சை செய்து அவர் வெற்றி பெற்றிருக்கிறார். அவர் இப்பொழுது இங்கிலாந்திலுள்ள ஹாக்னி எனுமிடத்தில் இராணியாரின் குழந்தை வைத்தியசாலையில் கண்வைத்தியராக இருந்துவருகிறார். இதினின்றும்செவிடு எனும் நோயைச் சத்திர சிகிச்சையின் மூலமாகக் குணப்படுத்தலாமெனத் தெரிகிறது.

ஃ ஃ

## ரயில்ச் செய்தி.

தென்னிந்திய ரயில்வே ஏஜண்டு காரியாலயத்தில் விசாரித்ததில் கீழ்க்காணும் தேதிகளில் கீழ்க்காணும் லயன்கள் திறக்கப்படத் தயாராகவிருப்பதாகத் தெரிகிறதென அறிவிக்கப்படுகிறது:—

| | |
|---|---|
| பிக்ஷாண்டார் கோயில் லால்குடி லயன்— | க—உ—உஅ. |
| திண்டுக்கல் பொள்ளாச்சி லயன்— | ௩க—௩—உஅ. |
| கூடலூர் விருத்தாசலம் லயன்— | ௩க—௩—உஅ. |
| மதுரை போடிநாயக்கனூர் லயன்— | ௩0—௬—உஅ. |
| விருத்தாசலம் லால்குடி மெயின் லயன்— | ௩க—கஉ—உஅ. |

திண்டுக்கல்லிலிருந்து பழனிக்குச் செல்லும் இருப்புப்பாதையில் பங்குனி உத்திர உற்சவத்திற்கு வண்டிகள் விடப்படுமெனத் தெரிகிறது. பழனியில் ஏப்ரல் மாதம் மூன்றும் நாள் பங்குனி உத்திரவிழா நடைபெறுவதை முன்னிட்டுத் தென்னிந்திய ரயில்வே கம்பெனியின் மேற்பார்வையிலேயே ஓர் இந்திய சிற்றுண்டிச் சாலையை நடத்த ஏற்பாடு செய்யப்படுமென்றும் தெரிகிறது.

தற்சமயம் மணியாச்சி ஜங்ஷன் வழியாகச் சென்று வரும் ௩. இ, ௬ திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் வண்டிகள் பிப்ரவரி மாதம் முதல் தேதியிலிருந்து விருதுநகர் தென்காசி மெயின்லயன் வழியாகத் திருப்பிவிடப்படுமென்றும் மதுரையிலிருந்து செங்கோட்டைக்கும் செங்கோட்டையிலிருந்து மதுரைக்கும் புதிதாக வண்டித் தொடர்கள் விடப்படுமென்றும் இவை மணியாச்சி ஜங்ஷன் வழியாகச் செல்லுமென்றும் மதுரையிலும் செங்கோட்டையிலும் ௩. இ, ௬ வண்டிகள் வந்ததும் இவை புறப்படுமென்றும் தெரிகிறது.

---



## காலண்டர் வரவு.

கீழ்க்காணும் கம்பெனிகளிலிருந்து ககூஉஅ-ம் வருஷத்திய காலண்டர்கள் வரப்பெற்றோம்:—

(க) மைசூர் ஜவுளி வர்த்தகசாலை, ஜவுளி வியாபாரிகள், காரைக்குடி; இக் காலண்டரில் கண்ணைக் கவரும் வனப்பினதாய படமொன்று காணப்படுகின்றது. ஒருவர் ஜவுளிகளை எடுத்துக் காட்டுவதையும் இரு பெண்மணிகள் புடவைகளைக் கையில் வாங்கிப் பார்ப்பதையும் அப்படம் குறிக்கின்றது. தேதி விவரங்களும் உள்ளன.

(உ) ஏ. வி. அன் ஸன்ஸ், மோட்டார் வியாபாரிகள், காரைக்குடி. இக் காலண்டரில் மிக வனப்புள்ள வண்ண மயிலின் படமும் ஓர் மாதரசி ஓயிலாக நின்றுகொண்டிருக்கும் படமும் காணப்படுகின்றது. தேதி விவரங்களும் இருக்கின்றன.

(௩) வி. எஸ். அன் கோ., வியாபாரிகள், கோட்டையூர், ராமநாதபுரம் ஜில்லா. இக்காலண்டரில் தேதி விவரங்கள் காணப்படுவதோடு முன்னையதைப்போல் அழகிய மயிலின் படமும் அழகியதோர் பெண்மணி நின்று கொண்டிருக்கும் படமும் சேர்க்கப் பெற்றுள்ளன.

(௪) ஸோல்டன் அன் கோ, பிளாக் தயாரிப்பவர்கள், அச்சுக்கூடத்தார், ௭௪௬, திருவல்லிக்கேணி ஹைரோட், சென்னை. இது மாதம் ஒரு தாள் வீதமுள்ள சுவரில் மாட்டும் பெரிய காலண்டராகும். தேதிகளும் கிழமைகளும் பெரிய எழுத்துக்களில் பொறிக்கப பெற்றுளளன. தமிழ் மாதங்களும் தேதிகளும் விசேஷ தினங்களும் பிறவுங் காணப்படுகின்றன.

(௫) நெல்ஸன் அன் கோ, அச்சு எழுத்துக்கள் பார்டர்கள் முதலியன தயாரிப்பவர்கள், ௬உ, ஸ்வாமி பிள்ளை தெரு, சூளை, சென்னை. மாதம் ஒன்றுக்கு ஒரு தாள் வீதம் உள்ளது. தேதிகள் பெரிய எழுத்துக்களில் அச்சிடப்பெற்றுள்ளன. இந்து பண்டிகை தினங்களும் விரத தினங்களும் சிவப்புமையில் குறிக்கப்பெற்றுள்ளன.

(௬) கே. அப்துல் றஹ்மான் சாயபு அன் கோ, பேப்பர் மெர்ச்சன்ட்ஸ், அண்டு ஸ்டேஷனர்ஸ், ௩. ௪, ஆண்டர்ஸன் தெரு, மதராஸ். இது மாதம் ஒரு தாள் வீதம் உள்ளதோர் காலண்டராகும். இதில் ஆங்கிலத் தேதிகளும் தமிழ்த் தேதிகளும், மகமதிய வருஷ தேதிகளும், இராகு, குளிகை முதலிய காலங்களும் காணப்படுகின்றன. விடுமுறை நாட்களும் பண்டிகை தினங்களும் சிவப்பு மையில் அச்சியற்றப் பெற்றுள்ளன.

(எ) வைத்திய ஆசிரியர், ஆர். எம். கே. வேலுசாமி, சித்த வைத்திய சாலை, பழனி, மதுரை ஜில்லா. இதில் மாதம் ஒரு தாள் வீதம் சேர்க்கப் பெற்றுள்ளது. தமிழ் தேதிகளும் ஆங்கிலத் தேதிகளும், இராகு, குளிகை காலங்களும் விசேஷ தினங்களும் குறிக்கப் பெற்றுள்ளன.

(அ) வி. கே. எஸ். அய்யர் அன் கம்பெனி, சிவபுரிப் புகையிலை வியாபாரிகள், சிதம்பரம். சிறிய எழுத்துக்களில் ஆங்கிலத் தேதிகள் பொறிக்கப் பட்டிருக்கின்றன. ஆறுமுகக் கடவுள், வள்ளி தெய்வானையுடன் மயில்மிசை வீற்றிருக்கும் சிறிய படமொன்றும் இதில் அச்சிடப்பெற்றுள்ளது.

(௯) மைசூர் ஜவுளி வர்த்தகசாலை, ஜாரக்ஸ் எனும் மருந்து ஏஜண்டுகள், காரைக்குடி. இது ஓர் அழகிய படமுள்ள காலண்டராகும்.

(க0) சேஷசாயி பிரதர்ஸ் லிமிடெட், மோட்டார் டீலர்ஸ், காரைக்குடி. ஒவ்வொரு மாதத்திற்கும் ஒவ்வொரு தாள் வீதமுள்ள காலண்டர். அழகிய நேர்த்தியான கடிதத்தில் அச்சிடப்பெற்றுள்ளது. ஒவ்வொரு பக்கத்திலும் மோட்டார்கார் படம் காணப்படுகிறது.

## ஓர் வெள்ளையர் மீது வழக்கு.

இராஜாங்க சபை அங்கத்தவரான கனம் ஸேத் கோவிந்ததாஸ் அவர்கள் ஜபல்பூர் மாஜிஸ்திரேட் கோர்ட்டில் அவ்வூரிலிருந்து வரும் இராணுவ அதிகாரியான காப்டன் ஹாரிஸ் என்பவர் மீது இந்தியன் பினல்கோடு ௩0௪-வது பிரிவுப்படியும், ௩௫௩-வது பிரிவுப்படியும் வழக்குத் தொடுத்திருக்கிறார். வாதி கூறும் விவரம் வருமாறு:—வாதி நாளது ஜனவரி மாதம் கஎ-ம் நாள் நர்மதை நதியில் கௌரி கட்டத்திற்கு உலாவச் சென்றிருக்கையில் காப்டன் ஹாரிஸ் என்பவர் ஓர் வண்டிக்காரனை நையப்புடைத்துக் கொண்டிருந்ததைக் கண்டார். அவன் உதவியைகோரி அழுதுகொண்டிருந்தான். இதைக் கண்டதும் வாதி அவ்விடம் சென்று வண்டிக்காரனை எதை முன்னிட்டு அடிக்கிறீர்களெனக் கேட்டார். இதைக் கேட்டதும் காப்டன் ஹாரிஸ் வண்டிக்காரனை அடிப்பதை நிறுத்தி மிகுந்த கோபத்துடன் ஸேத் கோவிந்ததாஸை "நீர் யார்" என வினவினார். வண்டிக்காரன் தன் தேசத்தவனென்றும் அவ்வேழை மனிதனிடம் அனுதாபம் காட்டுவது இயற்கை யென்றும் ஸேத் கூறினார். இதன்மேல் காப்டன் ஹாரிஸ் வீறுகொண்டு 'நீங்களும் உங்கள் நாடும் பொதுஜனங்களும் பாழகப் போகட்டும்' என்று கூறி ஸேத் அவர்களது முகத்திலும் குத்திவிட்டார். உடனே ஸேத் அவர்கள் பக்கத்திலிருந்த ஒருவரது கையிலுள்ள தடியைப் பறித்துக் கொண்டு திரும்புவதற்குள் அவ்வைரோப்பியர் தடியைக் கண்டதும் பக்கத்திலிருந்த தனது மோட்டாரில் ஏறிக்கொண்டார். அந்த மோட்டாரில் அவரைத் தவிர இரு மாதர்களிருந்தனர். எனவே ஸேத் அவர்கள் அவ்வெள்ளையரை ஓர் ஆண்மகனைப்போல் மோட்டாரை விட்டு வெளிவரும்படி அறை கூவியழைத்தார். ஆனால் அவ்வைரோப்பியர் அவ்வாறுசெய்யாது மோட்டாரை ஓட்டிக் கொண்டு போய்விட்டார். பின்னர் ஓர் போலீஸ் சப் இன்ஸ்பெக்டர் அவரைத் தடுத்து அவரது பெயரையும் விலாஸத்தையும்குறித்துக்கொண்டார்.

வண்டிக்காரனும் அவர் மீது ஓர் வழக்குத் தொடர்ந்திருக்கிறான்.



# குமரன் ஆண்டுமடல்.

## இரண்டாவது வருடம்.

குமரன் ஆண்டு மடலானது முதன் முதல் இவ்வருட ஆரம்பத்தில் வெளியிடப் பெற்றது. அதில் வெளியிடப் பெற்ற அருமை பெருமைகளைப் பாராட்டி, ஏற்றிப் போற்றிப் புகழாதவர்கள் யாருமில்லை. அடுத்து வரும் சித்திரை மாதத்தில் ஆண்டு மடல் வெளியிடுவதற்கான திறமையான ஏற்பாடுகள் செய்யப்படுகின்றன. தமிழ் நாட்டிலுள்ள தலைவர்கள், தேசாபிமானிகள், அறிஞர்களின் சிறந்த கட்டுரைகள், ராஜீய சமூக விஷயங்களை விளக்கிக் காட்டும் விநோதப் படங்கள், சித்திரப் படங்கள், சிறு கதைகள், விநோதக் குறிப்புகள், சிறு நாடகங்கள் முதலியவை அடங்கியதாய் உயர்ந்த காகிதத்தில் அச்சிடப் பெறும்.

## விலை விவரம்.

| | | |
|---|---|---|
| சந்தாதார்கட்கு. | ... | ரூ க—0—0. |
| மற்றவர்க்கு. | ... | ,, க—௪—0. |

தபாற் செலவு வேறு.

குறிப்பு:—பிரபவ வருஷம் பங்குனி மாதம் ௩0-ந் தேதிக்குள் ஆபீசுக்குப் பணம் வந்து சேரும்படி அனுப்புவோர்க்குத் தபாற்கூலி இனாம். ரெஜிஸ்டர் மூலம் பெற விரும்புவோர் இரண்டணா அதிகமாக அனுப்புதல் வேண்டும். மொத்தமாக வாங்கி வியாபாரஞ்செய்ய விரும்புவோர் மாசி மாதம் ௩0-ந் தேதிக்குள் தெரிவிக்கவேண்டும். க00-க்கு உ0 கமிஷன் கொடுக்கப்பெறும்.

## விளம்பரங்கள்.

விளம்பரங்களுக்காக சொற்பப் பக்கங்களே ஒதுக்கி வைக்கப்பட்டிருப்பதால் வியாபார நண்பர்கள் தங்கள்நமது விளம்பரங்களை முன் பணத்துடன் தாமதியாது அனுப்புவது நலம். எமது "குமரன் ஆண்டு மடல்" இது வரை வெளி வந்துள்ள எந்தத்தமிழ் ஆண்டு மடலையும்விட எத்தனையோ மடங்கு அதிகமாக, வியாபாரச் செய்திகளுடனும், படங்களுடனும், அறிஞர்களின் பல அரிய கட்டுரைகளுடனும் மிளிர்ந்திலங்குமாகையால் ஒவ்வொரு தமிழர் கையிலும இந்தியா, பர்மா, இலங்கை, மலாய்நாடுகள், சயாம், சைனா, பிஜித் தீவுகள், தென ஆபிரிக்கா முதலிய இடங்களில் அது இருக்குமென்பது நிச்சயம். ஆகையால் நமது வர்த்தக மித்திரர்களுக்கு தங்கள் சரக்குகளை உலகில் நாற்பக்கமும் விளம்பரப்படுத்த இதை விட நல்ல சந்தர்ப்பம் வாய்ப்பதரிது. இந்த உண்மையை தற்சமயம் நமது குமரனி"ல விளம்பரஞ் செய்துவரும் நண்பர்கள் அறிவார்கள்ர.

## விளம்பர விகிதம்.

| | | |
|---|---|---|
| ஒரு பக்கத்திற்கு | ... | ரூ ௨0—0—0. |
| அரைப் பக்கத்திற்கு | ... | ,, க௨—0—0. |
| கால் பக்கத்திற்கு | ... | ,, எ—0—0. |
| அட்டை இரண்டாம் பக்கத்திற்கு | | ,, ௩0—0—0. |
| ஷை மூன்றும் பக்கத்திற்கு | | ,, ௩௫—0—0. |
| ஷை நாலாம் பக்கத்திற்கு | | ,, எ௫—0—0. |

ஒவ்வோரு விஷயப் பக்கங்களின் கீழ் ஒரு வரி விளம்பரஞ் செய்ய ... ரூ க௨௫—0—0.

குறிப்பு:—விளம்பரம் அனுப்புவோர் பங்குனி மீ க௫உக்குள் அனுப்பவேண்டும்.

மானேஜர்,

தனவைசியன் கம்பெனி லிமிடெட், காரைக்குடி.

## நோட்டீஸ்.

தேவகோட்டை,
டி. மு. கோர்ட்டு.
1928-ஆ O. P. No. 1-ல்

...ளத்தூர் மைனர் சொ. மு. ...ட. சோலையப்ப செட்டியார் ...த்த ஸ்னேகிதி வள்ளியம்மை ...ச்சி மூலமாய்.— } மனுதார்

Nil.— எதிர் மனுதார்.

...லேட் சொ. மு. ராம, ராமனுதன் ...ட்டியார் என்பவர் பள்ளத்தூரில் ...த்து வந்து ஷையார் அவிபக்த ...மாரனை மனுதாரையும், ஷையார் ...ம்சாரமும், மனுதாரின் தாயாருமான ...ள்ளியம்மை ஆச்சியையும் விட்டு ...டு 9—3—26-ஃ யில் காலஞ் ...சென்றுவிட்டாரென்றும். ஷை ராம ...தன் செட்டியாருக்கு மனுதாரே ...ர்வைவர்ஷிப் பாத்தியப்படி சரியான ...ார்ஸ் என்றும், ஷைராமனுதன் செட்டியாருக்குப் பாத்தியமான, ரெங்கூன் இன்டோ பர்மா பெட்ரோலியம் கம்பெனி லிமிடெட்-ல் 50701 முதல் 50800 வரை ஷேர்கள் சம்பந்தமாயும், பர்மா அட்டாக் ஆயில் கம்பெனி லிமிடெட்-ல் 411 ஷேர்கள் சம்பந்தமாயும் வட்டி லாபம் வாங்கவும் அவைகளை டிரான்ஸ்பர் செய்யவும் அதிகாரத்துடன் மனுதாருக்குச் சர்ட்டிபிகேட்டுக் கொடுக்கவேணுமாய் கோறி மனுதார் ஷை நம்பரில் மனுச்செய்து கொண்டு ஷை மனுவுக்கு 10-2-28-ஃ வாய்தா ஏற்பட்டிருக்கிறபடியால் அதற்கு ஆக்ஷேபணையுள்ளவர்கள் யாரும் ஷை தேதியில் ஆஜராகி ஆக்ஷேபணைகளைத் தெரிவித்துக்கொள்ளலாம்.

M. R Sivaramakrishna Iyer,
Petitioner's Pleader.
(57) 19—1—28.

## நோட்டீஸ்.

சிவகெங்கை
டி. மு. கோர்ட்டு.
1923-ஆ O. S. கெ. 276.
1927-ஆ E. P. கெ. 375.

வாதிகள்.

ந. சி. வெள்ளச்சுத்தான் அம்பலம் வகையரு.

பிரதிவாதிகள்

ராம நாடான் வகையரு.

ஷை நம்பரில் டிக்கிரியில் கண்ட 1, 2 லெக்க சொத்துக்கள் ஏலத்துக்குக் கொண்டுவா நிறைவேறுதல் மனுப் போட்டு ஏல கோட்டீசு வாய்தா 23—2—28-க்கு ஏற்பட்டிருப்பதில் ஷை 9, 10 பிரதிவாதிகளான முறையே பட்டமங்கலம் சொக்கப்ப செட்டியார் மகன் ராமசாமி செட்டி என்ற காசி செட்டி, வெளியாரி கருப்ப நாடான் மகன் வீரப்ப நாடான் இவர்கள் கோட்டீசை ஷை வாய்தாவுக்கு கோர்ட்டு வாசலிலும், வீட்டு வாசலிலும் ஒட்ட மனுக் கொடுத்து 20—1—28 ல் உத்தரவாகி கோட்டீசுப் படியும் கட்டியிருக்கிறது. ஷை வாய்தாவில் ஆஜராகாத பட்சத்தில் எக்ஸ்பார்ட்டி ஆகிவிடுமென்று இதன் மூலம் அறிவித்திருக்கிறது.

S. சின்னஸாமி அய்யங்கார்,
வக்கில்.
சிவகெங்கை,
(56) 21—1—28.

இனம்! விளம்பரம். இனம்!!

படுக்கையறையை அலங்கரிக்கும் பிரெஞ்சு லேடிகளின் அழகிய பெட்ரூம் போட்டோ படங்கள் 50. எங்களுடைய உயர்ந்த 14 K. T. கோல்ட்பிளேட் பௌன்டன் பேனு வாங்குவோர் ஒவ்வொருவருக்கும் இனமாக கொடுக்கப்படும் உடனே ஆர்டர் செய்யுங்கள்.
விலை ரூபா. 1—8—0.

விலாசம்:— கௌரி அண்கோ,
... பீட் ஜீ. டி. மதராஸ்.

## நோட்டீஸ்.

இராமனுதபுரம்ஜில்லா திருவாடானை பிர்க்கா யெழுவங்கோட்டை தாலுகா பெரியகாரை கிராமத்திலிருக்கும சிலையப்பன் சேர்வை மகன் நாச்சியப்பன் சேர்வையாகிய நான் இதன் மூலம் எல்லா ஜனங்களுக்கும தெரிவிப்பதாவது:—

என் தகப்பனுர் மேல்கண்ட சிலையப்பன் சேர்வை என்பவர் சுமார் (80) வயதுள்ள விருத்தாப்பியராகவும் எழுதப் படிக்கத் தெரியாதவராகவும் சென்ற ஒரு வருஷம் முதற்கொண்டு சித்தசுவாதீன மில்லாதவராகவும் யதேச்சையாய் திரிந்துகொண்டிருபபதால் அவரிடம் யாரும் கொடுக்கல் வாங்கல் முதலியது செய்யக்கூடாதென்றும் யாதொரு தஸ்தாவேஜிகளும் வெண்ணிலையாகவாவது சொத்துக்களைப் பொறுத்தாவது எழுதி வாங்கக்கூடாதென்றும் அறிவிக்கப்பட்டிருக்கிறதுடன் மீறி ஏதேனும் தஸ்தாவேஜிகள் எழுதி வாங்கினலும் கொடுக்கல் வாங்கல் செய்தாலும் அவைகள் செல்லாதென்றும் ஷையார் வார்சான என்னையும் எங்களுடைய ஸ்தாவாஜங்கம சொத்துக்களையும் கட்டுப் படுத்தக் கூடியதில்லையென்றும் இதன் மூலம் பகிரங்கமாய் விளம்பரம் செய்யப்பட்டிருக்கிறது.

பேரி. சி. நாச்சியப்பன் சேர்வை
(54) உக—க—உஅ

## நோட்டீஸ்.

புதுக்கோட்டை சமஸ்தானம் திருமயம் தாலுகா பொன்னமராவதி சப் டிஸ்டிரிக்டு பொன்னமராவதி மேல வட்டம் வலையப்பட்டியிலிருக்கும் முத்துக்கருப்பஞ் செட்டியார் மகன் ந. மு. லெ. லெட்சுமணஞ் செட்டியார் இந்த விளம்பரம் மூலம் பொதுஜனங்களுக்கு தெரிவிப்பது என்னவென்றல் :—

தற்போது எனக்குள்ள ஸ்தாவர சங்கம சொத்துக்கள் அனைத்தும் எனது சுயார்ஜிதமென்றும் அவைகளை எனது குமாரர்களான (1) முத்துக் கருப்பன், (2) ராமநாதன், (3) வைரவன் ஆகிய மூவரும் எனக்குப் பிற்காலம் பிரித்துக்கொண்டு அனுபவித்துவாலாமே தவிர அவைகளை விற்கவோ அல்லது வேறு விதத்தில் பாதீனம் செய்யவோ கூடாதென்றும் அவர்களுக்கு ஏற்படும் ஆண் சந்ததிகளே சர்வ சுதந்திர பாத்தியதையுடன் அனுபவித்து வரவேண்டுமென்றும் 1925ம் ஆ செப்டம்பர்-மீ 2-ஃயில் உயில் எழுதி ரெஜிஸ்தர் செய்து வைத்திருக்கிறேன். இதனை எல்லா ஜனங்களும் அறிந்துகொள்ளவேண்டியது.

இப்படிக்கு,
ந. மு. லெ. லெட்சுமணன்
(42) செட்டியார்.

## நோட்டீஸ்.

தேவகோட்டை
டெம்பரரி சப் கோர்ட்டு.
1928-ஆ இன்ஸால்வென்ஸி மனு
நிம்பர் 1.

காரைக்குடி ப. ராம. சிவ. நா. அருணசலம் செட்டியார்... } மனுதார். (கடனாளி)

K. R. N. L. லெட்சுமணன் செட்டியார் வகையரா ... } எதிர்மனுதார்கள். (கடன்காரர்கள்.)

ஷை மனுதார் தன்னை கடன் தீர்க்கச் சக்தியற்றவரென்று தீர்மானிக்கக் கோறி 1920-ஆ 5-வது ஆக்டு 10 (1) பிரிவுப்படி இந்தக் கோர்ட்டில் மனுக் கொடுத்திருக்கிறர் என்பதையும் ஷை மனு 1928-ஆ மார்ச்சு மீ 12-ஃ விசாரணைக்கு வருகிறதென்பதையும் இதன் மூலம் அறியவும்.

கே. ஏ. கிருஷ்ணய்யர்,
பிரின்சிபல் சப ஜட்ஜ்.
தேவகோட்டை,
(59) 18—1—28.

சிறு பெண்ணும் சமைக்கலாம்.
கைக்கு லேசாயும்
இலகுவாயும் இருப்பதால் இந்த
**ருக்மணி குக்கர்.**
அடுக்கைக்கொண்டு சிறுபெண்கூட நல்ல சமையல் செய்யலாம்.
ஐந்து அளவுகளில்
1, 2, 4, 6, 8 பேர்களுக்குத் தகுந்த ரூ. 13, 18, 22, 27, 33-ல் கிடைக்கும். ரயில் கூலி வேறு.
விபர புத்தகம் இனம்.
ஏஜெண்டுகள் தேவை.
ருக்மணி குக்கர் கம்பெனி,
(9) ராயபுரம், சென்னை.

இனம்! "வி" [ரிஜிஸ்டர்] டைம்பீஸ்!!
முந்துங்கள்! தவற வேண்டாம்!!
22 காரட்டு தங்க கிலிட்டு கை கடியாரம் ஆர்டர்செய்கிறவர்களுக்கு, பிரசித்தி பெற்ற "வி" ரிஜிஸ்டர் டைம்பீஸ் இனம்.

ஒரு மாதம் வரையில் எங்களின் 22 காரட்டு ரோல்டு கோல்டு கை கடியாரத்திற்கு ஆர்டர் செய்கிறவர்களுக்கு, ஒரு பட்டு பட்டையுடன் ஒரு "C" (regd) டைம்பீஸ் இனம் கொடுக்கப்படும். கெடியாரத்திற்கு 10 வருஷம் உத்திரவாதம்
(7) இனமுடன் கடியாரம் விலை ரூ. 7 தான்.
விலாசம்:— வி. எஸ். வாச் கம்பெனி, (தபால் பெட்டி 105, மதராஸ்.)

சி. ஆறுமுக ஆச்சாரி
அண்டு கம்பெனி,
கண்டவராயன்பட்டி.

இங்கு அழகான மரவேலைகளும் பீரோல், நாற்காலி முதலியவைகளும் இன்னும் பலவிதமான மர வேலைகளும் ஆர்டரினபடி செய்யப்படும். (53)

(22) வயிறு வேடிக்க சிறிப்பு.
மோகனவல்லி அல்லது தாசியின் மோசம்.
ஓயாச் சிறிப்பைத்தரும் தமிழ் நாவல் மூன்று அணு ஸ்டாம்பு அனுப்புகிறவர்களுக்கு புத்தகம் அனுப்பப்படும் 64 பக்கங்களுடன் உயர்ந்த காகிதத்தில் அச்சிடப்பெற்றது. ஒருவர் எழுதுகிறர். "இப் புத்தகத்தைப் படித்து. என் நண்பர் ஒரு வருக்கு உண்மையில் வயிற்றுவலி வந்துவிட்டது". படிக்க படிக்க ஓயாச் சிறிப்பைத்தரும் வயோதிகர்கள் கூட இருதயம் வெடிக்கச் சிறிப்பார்கள் உடனே எழுதுங்கள். M. கிருஷ்ணன், 37. ஆயனூர் முத்தையா முதலி தெரு, ஜி. டி. மதருஸ்.

மகாத்மா காந்தி ஜோஸ்யர்.
உங்கள் ஜாதகம் அனுப்பவும் அல்லது தபால் எழுதும் நேரம் தெரிவிக்கவும். ஆருடம்எதிர்காலத்தைப்பற்றிய 5-கேள்விகளுக்கு ரூ. 1. மேற்கொண்டு கேள்வி 1-க்கு அணு 4. வருஷபலன் (மாதவாரி விவரம்) ரூ. 2. வியாபாரிகளுக்கு (வாராந்தர விவரங்கள்) 1-வருஷம் ரூ. 10.
V.K. சடகோபாச்சாரியார், ஜோதிடர்.
(10) திருத்தனி, சித்தூர் ஜில்லா.

பாரிஸ் லேடிகளின் கலர் பெட்ரூம் போடோ படங்கள்.
பார்ப்பவர் மனம் பரவசமடையச் செய்து ஆண், பெண் இருதாத்தாருக்கும் ஆனந்தத்தைக் கொடுக்கும். பாரிஸ்தேச பெண்மணிகளின் ரூபலாவண்யம், ஜலக்கிரீடை, லீலாவினோதம் இதில் காணலாம். இதை பெட்ரூம்களில் வைக்க வெகு சுந்தரமாயிருக்கும். 12-ரகம் கொண்ட செட்டு 1 டஜன் படங்கள் விலை ரூ. 2-2-0. 2 டஜன் படங்கள் விலை ரூ. 4. வி. பி. சட்டமில்லாத வெளிதேயவாசிகள் ஷை படம் விலை
(13) யுடன் தபால் சிலவுக்காக அணு. 6. சேர்த்து அனுப்பவேண்டும்.
விலாசம் :–The United Swiss Watch Co. Washermanpet P, O, Madras.

குமரன் வாரப் பதிப்பு.

| | |
|---|---|
| உள் நாடு வருடம் க-க்கு | ரூ. 5 0 0 |
| ,, ஆறு மாதம் | ரூ. 3 0 0 |
| வெளி நாடு வருடம் க-க்கு | ரூ. 6 0 0 |

குமரன் மாதப் பதிப்பு.

| | |
|---|---|
| உள் நாடு வருடம் க-க்கு | ரூ. 1 8 0 |
| வெளி நாடு ,, | ரூ. 2 0 0 |

ஸ்டேன் கிளாஸ்.
மிக அழகு பொருந்தியது! எண்ணத்தகாதபடி மிக சாசவிலைக்குக் கிடைப்பது!!
சாதாரணக் கண்ணுடிகளையும்
மிக அழகிய வர்ணக் கண்ணுடிகள் ஆக்கும் திறமை வாய்ந்தது.
உங்கட்குப் பெரும் விந்தையை அளிக்கும் வீடுகள் அரண்மனைகள் அல்லது எவ்வித கட்டிடங்களாக இருப்பினும் உபயோகப்படுவது.
விலை ஒரு அடிக்கு 4 அணு முதல் 8 அணு வரைதான்.
முழு விபரங்கட்கு எழுதுங்கள்.
(58) காம்பெல் அன் சன்ஸ்,
பிரிகேட் ரோடு, பங்களூர்.



சிங்காரம்! சிங்காரம்!!

உங்கள் வீட்டின் அலங்காரத்துக்கு

# சா. லெ. செ.

சிமிண்டு பாப்பு பூக்கற்களின்

# சிங்காரமே சிங்காரம்.

மீனுக்ஷி டைல் ஒர்க்ஸ், காரைக்குடி.

வெளுமை எல்லாம்—பாலாகுமா!

சோடா புட்டியில் உள்ளவைகளெல்லாம் சோடா, கலர் ஆகிவிடுமா? தண்ணீரின் பரிசுத்தம், வாசம், ருஜி, ஆரோக்கியம், ஆசாரம் முதலியன அமைந்தது "சா. லெ. செ." சோடா, கலர், கிரஷ்களுக்கே.

(3) சா. லெ. செ. மீனுக்ஷி சோடா வாட்டர் கம்பெனி.

டாக்டர் தாமஸ் வருகீஸ், சி. டி. எஸ்.,
**பல் நோய் வைத்திய நிபுணர்,**
(ஏற்கனவே சிலோனில் இருந்தவர்)
**கல்லுக்கட்டி மேல்கரை, காரைக்குடி.**
எல்லாவகைப் பல் நோய்களுக்கும் வைத்தியம் செய்பவர்.
பல் வைத்தியத்தில் விசேஷ யோக்கியதை கொண்டவர்.
வலி இல்லாமல் பல் எடுக்கப்படும்.
பல் சொத்தை விழுவது நிறுத்தப்படும்; பற்கள் சுத்தம் செய்யப்படும். பற்கள் அழகாக அமைக்கப்பெறும்.
**Dr. Thomas Varughese,** C. D. S.
(52) Kallukatti, KARAIKUDI.

காசிப்பூர் பன்னீர்.

பரிசுத்தமானது! மிக்க மணமுடையது!!
எல்லோராலும் நன்கு மதிக்கப்பெற்றது.
விலை விவரம்.

| | | | |
|---|---|---|---|
| 24 அவுன்ஸ் முழுப் பாட்டில் 1-க்கு | ரூ | 2—0—0 |
| 12 ,, அரைப் பாட்டில் ,, | ரூ | 1—2—0 |

# மைசூர் ஜவுளி வர்த்தகசாலை.

(55) அம்மன் சன்னதி வீதி, காரைக்குடி.

வியாபாரத்தின் சூக்ஷ்மம் விளம்பரமே.
குறைந்த விகிதத்திற்கு குமரனில் விளம்பரம் செய்யுங்கள்.

முந்துங்கள். இனம்! மூன்று சாமான்கள் இனம்!! உடனே முந்துங்கள்.
டயம்பீஸ் 3 வருஷம் உத்தரவாதம் உள்ளது 1, எலக்டிரிக் பாகட் லயிட் 1; உயர்ந்த 14 காரட் பௌன்டன் பேனு 1, ஆக மொத்தம் மூன்று சாமான் இனம்.

நூதன ஜர்மன் எலக்டிரிச் லயிட் விளக்கு இதை மேஜையின் பேரிலும் சுவற்றிலும் வைக்கலாம். இராத்திரியில் படுக்கையில் இருந்தபடியே விளக்கை இதில் கண்ட கயிற்றின் (wire) உதவியால் நிறுத்தவும் செய்யலாம். புயற்காற்று அடித்தாலும் எரியும். பிரகாசம் கண்ணைப் பறித்துக்கொண்டு போகக்கூடியது. விசேஷ காலங்களில் வைத்தால் திரளான ஜனங்களுக்கு வெளிச்சத்தைக் கொடுக்கும். மிகஜாக்கிரதையாக பாக்கிங் செய்து அனுப்பப்படும். மேற்கூறிய சாமான்களைச் சேர்த்து விலை **5-12-0.** எமது விலாசம்:—

பிரிட்டிஷ் அமெரிகா டிரேடிங் கம்பெனி,
(21) 67, கோவிந்தப்ப நாயக்கன் தெரு, மதருஸ்.

ஆங்கிலம் படிக்க விரும்பும் அன்பர்களே நீங்கள் என் கவலைப்படுகிறீர்கள்!
40,000 ஜனங்களால் வாசித்து எங்கும் பிரபல்யமடைந்த எமது

# ஆங்கில ஆசான்.

தமிழ் எழுத்துக்களை வாசித்தால் இங்கிலீஷ் பதங்கள் வெகு சுலபமாய்த் தெரிந்துகொள்ளலாம்.
இது 9-ம் பதிப்பு, 800 பக்கம் கொண்ட ஓர் பெரிய புத்தகம்.

உபாத்தியாயர் இல்லாமல் சுலபமாய் இங்கிலீஷ் கற்றுக்கொள்ள உதவும் புத்தகம் இதுதான். இதுமாதர்களுக்கும், வியாபாரிகளுக்கும், தொழிலாளிகளுக்கும் மிகவும் முக்கியமானது. இப்பதிப்பில் மிகவும் சிரமப்பட்டு 1-அணு முதல் 3,000 ரூ. வரைக்கும் மாதச் சம்பள கணக்கு போடப்பட்டிருக்கிறது. இதற்குப்பின் வந்துள்ள போலி புத்தகங்களை வாங்கி ஏமாறுமல், இச்சப்படத்தில் காட்டியுள்ள லேடி டிரேட்மார்க் போட்டுள்ளதை பார்த்து வாங்குங்கள்.

முழுகாலிகோ பைண்டு புத்தகம் 1-க்கு ரூ 2
வி. பி. தபால் சிலவு அணு 8.
அந்நிய நாட்டினர் முன்பணம் அனுப்பவேண்டும்.

(12) தி. இராஜகோபால் முதலியார், தங்கசாலை வீதி, சென்...

காலத்திற்கேற்ற நூல்! காதலர்கள் தேடும் நூல்!!

இதன் முதலிரண்டு பதிப்புக்களின் 5000-பிரதிகள் இரண்டே மாதங்களில் செலவாகிவிட்டன.

# இல்வாழ்க்கையின் இரகசியங்கள்.

3-ம் பதிப்பு.] அழகான பயிண்டு உயர்ந்த நிக்கு கிளேஸ்காகிதம். நேர்த்தியான அச்சு. சுமார் 400 பக்கங்கள் கொண்ட பெரிய புத்தகம் அநேக அழகிய ஆப்டோன் படங்களுள்ளது. [விலை ரூ. 2.

இந்த நூலில் அடங்கிய சில முக்கிய விஷயங்கள்.

1. இல்வாழ்க்கை ஏன் சிறந்தது?
2. இல்லறத்திலிருந்து மோக்ஷமடைவதெப்படி?
3. பெண்ணின் பெருமை, பெண் கல்வி.
4. நாணம் எப்படி உண்டாயிற்று?
5. உடைக்கும் நாணத்திற்கும் சம்பந்தம்.
6. நாம் ஏன் உடை தரிக்கவேண்டும்?
7. நிர்வாணமாயிருப்பதின் தத்துவமென்ன?
8. ஒவ்வொரு தேசத்திலும் கல்யாணங்கள் எப்படி நடக்கின்றது? உண்மையான கலியாணம் எது?
9. காதல் என்றால் என்ன?
10. அமெரிக்கா, பிரான்ஸ், இங்கிலாந்து, ஜப்பான், சீனா, துருக்கி முதலிய நாடுகளில் குழந்தைபெறும் விஷயத்தில் ஜனங்கள் என்னென்ன அநியாயங்கள் செய்கின்றனர். சிசுக் கொலை அநியாயம்.
11. ஒருவன் எத்தனை மாதரை மணம் புரிந்து கொள்ளலாம்? அவன் தன் சரீரத்தை எப்படிக் காப்பாற்றிக் கொள்வது?
12. தாசிகள் நாட்டிலே இருப்பது நன்மையா, தீமையா? தாசிகள் வீடுபோம் நபர்களுக்கு நாம் சொல்லக்கூடிய சில வார்த்தைகள்.
13. ஸ்திரீ ரோகங்கள் முதலியவைகளிலிருந்து எப்படி தப்பித்துக்கொள்வது?
14. ஸ்திரீ புருஷர்களின் மர்ம அங்கங்களின் அமைப்பும் அவைகளின் நேர்மையான உபயோகமாகும்.
15. ருதுவாவதின் மர்மம் அல்லதுமாதவிடாய் என்பதின் தத்துவமென்ன?
16. வாழ்க்கையில் முக்கியமாய் பெண்கள் அறிந்து கொள்ளவேண்டிய விஷயங்கள்.
17. பெண்களிடத்தில் பிணக்கு உண்டாவதற்கு காரணம். இதைப் போக்கக் கூடிய சுலபமான வழிகள்.
18. மனம் போல் மக்களைப் பெறும் அரிய உபாயங்கள்.
19. கருவிலிருப்பது ஆணு பெண்ணு என்று எப்படி அறிந்து கொள்வது?
20. தம் மனோபாவனையின்படி ஆண், பெண் உற்பத்தி செய்துகொள்ளும் தன்மை.
21. கர்ப்ப காலத்தில் ஸ்திரீகள் நடந்து கொள்ள வேண்டிய முறைகள்.

முக்கிய குறிப்பு:—இவைபோன்ற நூல்கள் இதற்கு முன் எத்தனையோ வெளிவந்திருக்கலாம். ஆனால் எல்லா ரகசியங்களையும் எடுத்துக் கூறுவது இந்நூல் ஒன்று தான்.

இல்வாழ்க்கையின் இரகசியங்கள்.

என்ற புத்தகம் ஒவ்வொரு ஊரிலுமுள்ள புத்தக வியாபாரிகளிடமும் கிடைக்கும் அல்லது எங்கள் விலாசத்துக்கு உடனே எழுதுங்கள்.

## எச்சரிக்கை.

எங்கள் புஸ்தகம் நன்றாக செலவாகிறதென்று கண்டு அநேகர் பல போலிப் புத்தகங்களைத் தயாரிப்பதாகத் தெரிகிறது. எனவே புத்தகத்தின் பெயரையும் புத்தகத்தில் "வாஸன் புத்தகசாலை" என்ற பெயர் இருக்கிறதாவென்றும் பார்த்து வாங்குங்கள்.

(37)

வாஸன் புத்தகசாலை, தபால் பெட்டி 119 நெ. 97, அண்ணாப்பிள்ளை தெரு, ஜி. டி. மதராஸ்.

---

இவர் மருந்து (முதல் தர) தேவ ஒளஷதங்களென்று 1923-ல் திருநெல்வேலியில் கூடிய சித்தர் ஆயுள்வேத மெடிகல் கான்பரன்சிலும், 2-18-23-ல் சென்னையில் நடந்த கான்பரன்ஸ் அண்டு எக்ஸிபிஷனிலும், தங்கமெடலும் "வைத்திய ஆசிரியர்" என்று பட்டமும் பெற்றவர்.

# நீரழிவுக்கு அப்ரேக் செந்தூரம்.

இதோ! ஒரு மருந்துக்கும் வசப்படாத வியாதி இந்த மருந்தில் தீருவது வெகு ஆச்சரியமாயிருக்கிறது. இப்படி சிரேஷ்டமான மருந்து இதுவரை வெளிவரவில்லை. எந்த மருந்திலும் தீராத வியாதிகள் அதில் அவசியம் தீரும். நீரழிவினால் ஜாஸ்தி போகும் நீரை நிறுத்தும், தாகத்தைக் குறைக்கும், நாட்பட்ட அஸ்தி வெட்டை, நீரோடு இந்திரியம் உடைந்து விழுதல், ஈ, எறும்பு மொய்த்தல், நாவரக்ஷி, மல பந்தம், உடம்பெரிவு, வெள்ளை, வெட்டை, கடுப்பு, எரிச்சல் முதலிய சகலவித கர்ம வியாதிகளையும் கண்டிப்பாய் நிவர்த்தியாக்கும். நீரிலுள்ள சர்க்கரையைக் குறைத்து சரீர வெளுப்பை மாற்றி தேஜஸ் பலம் கொடுக்கும். நீரழிவால் வரும் பிளவை ரணங்களை ஆற்றும். பசி தீபனத்தை உண்டாக்கும். ஜீவாதார நரம்புகளை முருக்கேற்றி, தாதுபுஷ்டியைக் கொடுக்கும்.

40—நாள் மருந்து ரூபா 40—0—0. 20—நாளைக்கு ரூபா 20—0—0.

நற்சாக்ஷியைக் கவனியுங்கள்:—நான் நீரழிவினால் அதிக உபத்திரவப்பட்டுக் கொண்டிருந்தேன். ஒரு வேளைக்கு அரைக்கால் படி வீதம் நாள் ஒன்றுக்கு 30 அல்லது 35 தரம் நீர் போய்க் கொண்டிருந்தது. அதிகப் பசியும் தாகமும் ஏராளமாயிருந்தது. தங்களுடைய அப்ரேக் செந்தூரத்தை வெண்ணெயில் 15 நாள் சாப்பிட்டேன். என் வியாதி பூரா சொஸ்தமாகிவிட்டது. நீர் சாதாரணமாய்ப் போகிறது. பசி தாகம் இயற்கை நிலைக்கு வந்து விட்டது சரீரத்திலுள்ள சுருக்கமெல்லாம் நீங்கி நல்ல ரத்தம் உண்டாகி சரீரம் நல்ல தேஜஸ் அடைந்துவிட்டது. சித்த ஆயுள் வேத வைத்திய விஷயமாய் தாங்கள் எடுத்துக் கொள்ளும் சிரத்தையானது மென்மேலும் விர்த்தியாகி பொது ஜனங்களுக்கு பேருதவி ஆவீர்களென்று சதா ஈஸ்வரனை பிரார்த்தித்துக் கொண்டிருக்கிறேன்.

எச். ராமசாமி அய்யர், தமிழ் பண்டிதர், முனிசிபல் ஹைஸ்கூல், பழனி.

தாளக பஸ்ப மென்பது சாமானியமானதல்ல இது எல்லா வைத்தியர்களாலும் செய்துகொள்ள முடியாது. இதை நான் முப்புவால் புகையாது கட்டி நீற்றிய பஸ்பமாகையால் நெருப்புக்கு அசையாது. மற்றவர்கள் செய்யும் பஸ்பத்தை நெருப்பின்மேல் வைத்தால் புகைந்து ஓடிவிடும். ஜாக்கிரதையாகப் பார்த்து வாங்குங்கள். ஆர். எம். கே. விலாசம் கவனித்து எழுதுங்கள், R. M. K.

# தாளகபற்பம் சாப்பிடுங்கள்; இருமலுக்கு - கைகண்டது; புகையாது.

எவ்வளவு நாட்பட்ட காசம், க்ஷயம், ஈளை, இருமல் சுவாசம், கோழை, கபக்கட்டு, பீனிசம் இருந்தாலும் சரி 8 வித காசமும் இந்த பற்பத்தைச் சாப்பிட்டால் அவசியம் தீரும்.

20-நாள் மருந்து அனுபான குணத்துடன் விலை ரூ. 25—0—0. ஏழைகளுக்கு பாதி விலை.

நற்சாக்ஷி:—நான் தங்கள் தாளக பற்பத்தை தங்கள் பிராஞ்சு மதராஸ் வைத்தியசாலையிலிருந்து வாங்கி ஒருவருக்குக் கொடுத்ததில் சௌக்கியமாகிவிட்டது. ஆதலால் எனது வியாதிக்கு வேண்டிய மருந்து விபரங்களை எழுதவும்.

(Sd.) M. A. பூபதி, 2-14, தாண்டவராய முதலி தெரு, திருவல்லிக்கேணி, மதருஸ், 8—2—27.

நற்சாக்ஷி:—எனக்கு வயது 50. 15 வருஷ காலமாய் இருமல் இளைப்பு வந்து ரொம்பவும் கஷ்டப்படுத்திக்கொண்டிருந்தது. எத்தனையோ வைத்தியர்களிடம் எத்தனையோ மருந்துகள் சாப்பிட்டேன். ஒன்றிலும் பிரயோஜனமில்லை. தங்கள் தாளக பற்பம் 10 நாள் சாப்பிட்டதில் என் வியாதி பூருவும் தீர்ந்து விட்டது.

பேப்பரைக் குறிப்பிட்டு எழுதவும்.

(11) (ஒப்பம்.) சை. இ. அப்துல் கரீம், மேலத்தெற்கு தெரு, பண்டாரவாடை, தஞ்சாவூர் ஜில்லா.

☞ வைத்திய ஆசிரியர், ஆர். எம். கே. வேலுசாமிபிள்ளை,

சித்த வைத்தியசாலை, பழனி. PALNI. தந்தி விலாசம்:—"சித்தர் பழனி"

(2) நமது பிராஞ்சு வைத்தியசாலை:—என். தண்டபாணி கம்பெனி 6-99 பவழக்காரத்தெரு, சென்னை. Tel:—"SIDDHAR PALNI" (12)



## இங்கிலீஷ் [illegible]ரஸ்பான்டன்ஸ்.

முந்துங்கள்! முந்துங்கள்!!

இளமையில் படிக்காமல் போய்விட்டோமென்று ஏன் கவலைப்படுகிறீர்கள்?

மெட்ரிக்குலேஷன் வரை தாங்கள் செய்யும் தொழிலுக்கு யாதொரு இடையூறின்றி தபால்மூலம் படித்து தாங்கள் விரும்பும் வேலைக்குப் போகலாம்.

தென் ஆப்பிரிக்கா, சுமாத்திரா, ஜாவா, பினங்கு, சிங்கப்பூர், இலங்கை, இந்தியா முழுவதும், பிரசித்தி பெற்று ஆயிரக்கணக்கான தொழிலாளிகள், வியாபாரிகள், புரோக்கர்கள், குமஸ்தாக்கள், மாணவர்கள வாசிக்கும் உலகப் பிரசித்திபெற்ற 5 மீ' இங்கிலீஷ் கோர்ஸில் முதலாவது சேருங்கள். விலை ரூ 5—0—0 முழு கோர்ஸ். விபரங்களுக்கு உடனே எழுதுங்கள்.

பிரின்ஸிபால்,
கேம்பிரிட்ஜ் இன்ஸ்டிடியூட்,
நாகூர்.

(33)

---

வெளிவந்து விட்டது! மூன்றாம் பதிப்பு!! வெளிவந்து விட்டது!!!

ஆசிரியரின்றி ஆங்கிலம் தெரிந்து கொள்ளும்

## ஆனந்த ஆங்கில பாஷா போதினி.

எம். ஏ. எல். பட்டம் பெற்ற ஆங்கில போதகாசிரியராகிய திருவாளர் எம். ஷண்முகசுந்ர முதலியாரவர்களால் செய்யப்பெற்ற உயர்ந்த திருத்தங்களோடும், சிறந்த அமைப்புகளோடும் நிறைந்த போதனைகளோடும் கூடியது.

TRADE MARK

இது 800—பக்கங்களுக்கு மேலுள்ளது; அழகிய முழு கலிகோ பைண்டு செய்யப்பட்டது.

16-ஆப்டோன் படங்களுடன் கூடியது.
விலை ரூபா 2—0—0.

ஆனந்த போதினிச் சந்தாதாரர்களுக்கு
31-12-27வரை ரூ. 1-4-0. போஸ்டேஜ் அணா 8.

இது இங்கிலீஷ் பாஷையை எளிதில் போதிக்கத்தக்கது. இது வரை வெளிவராத நூதன பாட முறைகளுடன் வெளியிடப்பட்டிருக்கிறது. இன்னும் இதில், ஒரு ரூபா முதல் 10 ஆயிரம் ரூபா வரை அம்பாரப்பட்டிக் கணக்கு, [illegible] தினங்களில் ஆங்கில பாஷையில் [illegible] வும், எழுதவும் தெரிந்துகொள்ளலாம்.

(6) ஷை தெலுங்குப் பதிப்பு ரூபா 2—0—0.

ஆனந்தபோதினி ஆபீஸ், தபாற்பெட்டி நெ. 167, மதராஸ்.

---

## யுனைடெட் இந்தியா லைப் அஷ்யூரன்ஸ் கம்பெனி,

(லிமிடெட்.)

தலைமை ஆபீஸ்—மதராஸ்

ஸ்தாபனம் 1906-ம் வரு

சென்னை மாகாணத்திலுள்ள லைப் அஷ்யூரன்ஸ் கம்பெனி இதுவே.

அக்கிராசனர்:—

ஸர். எம. ஸி. டி. முத்தையா செட்டியார் K. T., M. L. A.

சமீபத்தில் 5 வருஷத்திற்கென்று விநியோகிக்கப்பட்ட போனஸ் அஷ்யூரென்ஸ் தொகை ரூ 1000-க்கு ரூ 75.

ப்ரிமியம் மிதமானது. நிபந்தனைகள்—சுலபமானவை.

கிரேஸ் டயம் கொடுப்பதை ஒத்திவைப்பது—இதில் ஓர் விசேஷ பாத்தியதைகளை உடனே கவனிப்பது—ஓர் முக்கிய அம்சமாகும்

"இந்தியாவிலே மிகவும் உறுதியானதும், பணத்தை யுடையதும், மேலான நிர்வாகத் திறமையுடையதும் மிகச் சிக்கனத்துடன் கூடியதுமான கம்பெனிகளில் இதுவுமொன்று. லைப் அஷ்யூரன்ஸ் கம்பெனிகளில் முதன்மையானவற்றில் இது ஒன்றாகும்" என்று "பார்வார்டு" வருஷ அனுபந்தப் பிரசுரத்தில் காணப்படுகிறது.

விவரங்களுக்கு அடியிற் கண்டவருக்கு எழுதவும்.

எம். ராமமூர்த்தி, சீப் ஏஜெண்டு, ராமநாதபுரம் அண் புதுக்கோட்டை, காரைக்குடி. } மானேஜர்:— ஸ்டார் அண் கம்பெனி.

(30)

---

## குமரன் புத்தகசாலை.

தனவணிக நாட்டிலுள்ள தமிழபிமானிகளின் சௌகரியத்தை முன்னிட்டு, அநேக உயரிய தமிழ்ப் புத்தகங்களை வரவழைத்து விற்பனைக்கு வைத்திருக்கின்றோம்.

எம்மிடம் உள்ள புத்தகங்களில் சிலவற்றின் விலையை கீழே குறிக்கின்றோம்.

| | |
|---|---|
| ஸ்ரீமத் மகாபார்கவத வசனம் | ரூபாய் 5—0—0 |
| ஸ்ரீ இராம நாடகம் | 2—0—0 |
| விக்கிர மாதித்தன் பெரிய கதை | 2—8—0 |
| ஞானவாசிட்டம் மூலமும் உரையும் உயர்ந்த காலிக்கோ கில்ட்டு பயிண்டு | 6—0—0 |
| நைடதம் மூலமும் உரையும் | 4—0—0 |
| ஸ்ரீ இராமகிருஷ்ண பரம ஹம்சர் சரித்திரம் | 2—0—0 |
| நந்தனார் சரித்திரக்கீர்த்தனை காலிகோ பைண்டு | 1—0—0 |
| ஷை பாப்பர் பைண்டு | 0—12—0 |
| விவேகானந்தா—பக்தியோகம் | 0—10—0 |
| ஷை அருள் மொழிகள் | 0—12—0 |
| ஷை கடிதங்கள் 2-ம் பாகம் | 0—6—0 |
| ஷை தற்கால இந்தியா | 0—10—0 |
| ஷை எதிரொலிகள் | 0—8—0 |
| கர்மயோகம் | 1—0—0 |
| கிழக்கும் மேற்கும் | 0—8—0 |
| வேதாந்த ரகசியம் | 1—8—0 |
| காந்தி புராணம் மூன்றும் காண்டம் | 0—12—0 |
| என்கடன் பணிசெய்து கிடப்பதே | 0—8—0 |
| இகபாஞான சாகரத்திரட்டு | 0—8—0 |
| இந்தியாவும் சுய ஆட்சியும் | 1—8—0 |
| சகாதேவர் தொடுகுறி சாஸ்திரம் | 0—2—0 |
| அஷ்டவிம்சதி தோத்திரப் பிரபந்தம் | 0—4—0 |
| தோத்திரக் கோர்வை | 0—6—0 |
| சத்யாக்ரகம் | 0—6—0 |
| காந்தி பிள்ளைத் தமிழ் | 1—0—0 |
| சிவகாருண்ய பாட புத்தகம் | 0—1—6 |
| கற்பக விநாயகர் பதிற்றுப் பத்தந்தாதி | 0—4—0 |
| வைக்கம வீரர் சொற்பொழிவு | 0—1—0 |
| இருநூறு பல சில்லரைக் கொத்து | 3—0—0 |
| நமது பலசரக்குக் கடை | 0—10—0 |
| கூழை ரங்கன் | 1—0—0 |

வேண்டிய புத்தகங்கட்கு இன்றே ஆர்டர் கொடுங்கள்.

மானேஜர்,
குமரன் புத்தகசாலை, காரைக்குடி.

---

## The Madura Electric Company Ltd.

MADURA.

Rs. 10 Per share

Please take shares in the above company. [illegible] table concern. Apply for prospectus and application [illegible]

## மதுரை எலெக்டிரிக் கம்பெனி லிமிடெட்

மதுரை.

ஷேர் 1-க்கு ரூபா 10—0—0.

தயவு செய்து ஷை கம்பெனியில் பங்குகள் எடுத்துக்கொள்ளுங்கள். மிகவும் லாபகரமானது.

(43) பிராஸ்பக்டஸ்களுக்கும் விண்ணப்ப பாரங்களுக்கும் எழுதுங்கள்.

---

நீங்கள் வெகு காலமாக எதிர் பார்த்தது எது?

☞ அமெரிக்கன் சில்க் அங்கவஸ்திரம்

தூய்ய வெள்ளை, திக்கான பட்டு, தினசரி துவைத்து உபயோகி[illegible] வண்ணானுக்குப் போடலாம், இருபக்கங்களிலும் குஞ்சம் [illegible]

5மு x 40" அகலம் விலை ரூ. 6—8—0 தான்.

கிடைக்கவில்லையே! என்று வருந்த வேண்டாம். [illegible] ஒரு மாதத்தில் 1500 பட்டுகள் செலவாகியும், திரும்ப வந்த ஆர்டர்[illegible] கவனிக்க முடியவில்லை. புதிய ஸ்டாக் வந்திருப்பதால்,

முந்திக்கொள்ளுங்கள்! முந்திக்கொள்ளுங்கள்!!

(24) பாக்கிங், தபால் சார்ஜ் இல்லை.

கே. எஸ். முத்தையா கம்பெனி, சென்னை.

சொ. முருகப்ப செட்டியாரால் [illegible] 'குமரன்' அச்சுக்கூடத்தில் அச்சியற்றிப் பிரசுரிக்கப்பெற்றது.

